ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கரந்த கைங்கர்ய நன்கொடைத் திட்டம்

# ஒரு வேண்டுகோள்

ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் சிறப்பினையும், எம்பெருமானார் தரிசனத்தின் ஏற்றத்தையும், ஆழ்வார்கள் அருளிச் செயலின் உயர்வினையும், ஆசார்யர்கள் உபதேசங்களின் சீர்மையையும் நாடெங்கும் பரப்பும் அரிய பணியைப் புனிதமான கடமையாகக் கொண்டு 1980-ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது ஆழ்வார்கள் அமுத நிலையம்.

நாடெங்கும் கலி இருள் சூழ்ந்து நாஸ்திகம் மிகுந்து பக்தி உணர்வு குறைந்ததால், கால மழை பொய்த்து விளைவாசிகளின் விலை உயர்ந்து தேசமெங்கும் விபரீத நிலைமை ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில், கலியின் கொடுமை நீங்கித் தேசம் செழிப்புற்று மக்கள் மகிழ்வுற்று ஞானசம்பந்நர்களாய் வாழ பகவானின் கல்யாண குணங்களைப் பாடுவதும் பரப்புவதுமே இன்றியமையாத பணியாகும்.

இத்தகைய பணியைச் சென்ற 7 ஆண்டுகளாக ஆழ்வார்கள் அமுத நிலையம் செய்து வருவது யாவரும் அறிந்ததேயாகும். இப்பணியைத் தொடர்ந்து நல்ல முறையில் செய்யும்பொருட்டு இரு திட்டங்களைத் தொடங்கியுள்ளோம்.

## 1. அமுத நிலைய நூல்கள் வெளியீட்டுத் திட்டம்

முதல் திட்டத்தின்படி இதுகாறும் ஆழ்வார்கள் அருளிச் செயல்களையும், ஆசார்யர்கள் அமுத மொழிகளையும் கொண்ட அரிய விஷயங்களைச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளும்படி எளிய நடையில் 18 கிரந்தங்கள் வெளியிடப்பட்டுள்ளன. மேலும் பல கிரந்தங்களைத் தொடர்ந்து வெளியிட உத்தேசித்துள்ளபடியால், இப்பணி செவ்வனே நிறைவேறப் பகவதன்பர்களின் அன்பான நன்கொடையை எதிர்பார்க்கிறோம்.

## 2. நாலாயிர திவ்ய ப்ரபந்த உரை வெளியீட்டுத் திட்டம்

இரண்டாவது திட்டம் பகவானின் கல்யாண குணங்களைப் போற்றும் நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திற்குச் சம்ப்ர

இதன் தொடர்ச்சி 3-ம் பக்க அட்டையில் பார்க்கவும்.

வெளியீடு-18 ஸ்ரீ:



ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்

# வைகுந்தம் புகும் மண்ணவர் யார்?

(விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம்)


ஆசிரியர்:

“கலையிலங்கு மொழியாளர்”
பேராசிரியர்

**டாக்டர் இரா. அரங்கராஜன், M.A., Ph.D.,**
மதுரை





## ஆழ்வார்கள் அமுத நிலையம்

37, சௌத் கூவம் ரோட்,
கோமளேசுவரன்பேட்டை, சென்னை-2

பதிப்புரை 1987 ரூபாய்

முதல் பதிப்பு: ஏப்ரல், 1987

நூலின் விலை ரூ. 6
தபாற் செலவு 0-50

ப்ரசுரித்தவர்:

ஸ்ரீலக்ஷ்மீநாராயண ராமாநுஜ தாஸர்

விவரங்கட்கு:

ஆழ்வார்கள் அமுத நிலையம்
37, சௌத் கூவம் ரோட்
கோமளேசுவரன்பேட்டை, சென்னை-2

அச்சிட்டோர்:

வெற்றி அச்சகம்
91, டாக்டர் பெசன்ட் ரோடு
இராயப்பேட்டை, சென்னை-14

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம.

# அடியேன் விண்ணப்பம்

## (பதிப்புரை)

"வைகுந்தம் புகும் மண்ணவர் யார்?" என்னும் பெயரில் வெளியாகும் 'விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம்' என்னும் இக்ரந்தம் எம்பெருமானார் என்னும் ஆசார்ய புருஷரால் வடமொழி, மணிப்ரவாள நடையில் அருளிச் செய்யப்பட்டு ஸ்ரீமாந் டாக்டர் இரா. அரங்கராஜன் அவர்களால் எளிய நடையில் எழுதப்பட்டு வெளியிடப் படுகிறது. இக்ரந்தம் மோக்ஷத்தை விரும்பும் பகவத் பாகதர்களுக் கொரு பொக்கிஷமாகும், தங்களையும், ஈச்வரனையும் மறந்து சம்சாரமாகிற பெருங் கடலிலே விழுந்து நோவுபடும் சம்சாரிகள் கரை மரம் சேர்ந்து பகவானை யடைந்து உஜ்ஜீவிப்பதற்கு ஒரு வழிகாட்டியுமாகும்.

மாலுமியை இழந்த மரக்கலம் போல திகைக்கும் சேதனர்களின் கலக்கத்தைப் போக்கிக் கலங்கரை விளக்கு போல் நல்வழி காட்டும் நந்நூலாகும் இவ்வரிய க்ரந்தம். அநாதி காலமாக பிறவிக்கடலில் அழுந்தி எண்ணரிய பிறவிகளுக்கு ஆளாகி தவிக்கும் ஜீவாத்மா, பரமாத்மாவின் க்ருபைக்கு ஆளாகி, சதாசார்ய சம்பந்தம் அடையப்பெற்று பகவத்பாகவத கைங்கர்யபரராகி வீடு பேற்றை அடையும் வழிகளை தெளிவாக விளக்குகிறது.

சென்ற இரு வருடங்களுக்கு மேலாகவே வாசக அன்பர்களால் ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்டு பலவேறு சிரமங்களுக்கிடையே ஆழ்வார்கள் அம்ருத நிலைய 18வது வெளியீடாக வெளிவரும் இக்ரந்தத்தை ஆதரிக்கக் கோருகிறேம். அடியேனுடைய வேண்டுகோளுக்கிணங்கி விரைவில் இக்ரந்தத்தை எழுதியருளிய ப்ராசிரியர் டாக்டர் அரங்கராஜன் அவர்கட்கும், பெருங் கருணையுடன் பிழை திருத்தி வெளியிட உதவிய ப்ரபந்நவித்வான் R. எதிராஜ ராமாநுஜ ஸ்வாமி அவர்கட்கும் தலையல்லால் கைமாறிலேன்.

அடியேன்—தாஸாநுதாஸன்

ஸ்ரீலக்ஷ்மீநாராயண ராமாநுஜ தாஸன்

# முன்னுரை

இச்சிறு நூல **எறும்பியப்பா** என்ற தேவராஜ குருவிற்கும் அவருடைய சிஷ்யரான ஸேநாபதியாழ்வான் என்பவருக்கும் நடந்த உரையாடலாக அமைந்த "விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம்" என்ற உயர்ந்ததோர் நூலின் சுருக்கமாக அமைக்கப்பட்டுள்ளது ஸ்ரீமந் மணவாள மாமுனிகளின் அஷ்ட திக்கஜங்களில் ஒருவர் எறும்பியப்பா. இவருடைய திருநக்ஷத்ரத் தனியன்,

துலா ரேவதி ஸம்பூதம வரயோகி பதாச்ரிதம் |
ஸர்வ வேதாந்த ஸம்பூர்ணம் அப்பாசார்யமஹம்பஜே ||

என்பதாகும். இவருடைய நிதயத் தனியன்,

ஸௌம்ய ஜாமாத்ரு யோகீந்த்ர சரணாம்புஜஷட்பதம் |
தேவராஜ குரும் வந்தே திவ்யஜ்ஞானப்ரதம் சுபம் ||

என்பதாகும். இவருடைய சிஷ்யரான ஸேநாபதி யாழ்வானுடைய தனியன்,

சமதமாதி குணைக நிகேதநம்
சரமபர்வணி நிச்சல சேதஸம் |
யதிவராங்க்ரி ஸரோருஹ ஷட்பதம
ஸமரபுங்கவ ஸத்குரு மாச்ரயே ||

என்பதாகும.

விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம என்ற மிக அரிய நூல தமிழ எழுத்துக்களில 1904-ஆம ஆண்டு அச்சிடப்பட்டது. மணிப்ரவாள நடையில அமைந்த உரைநடை நூலான இது இக்காலத்துக் கிடைத்தற்கு அரிதாகிவிட்டது இந்த நூலை முழுதுமாக நல்ல முறையில தெளிவாகவும விளக்கக குறிப்புகளோடும அச்சியற்றி வெளிப்படுத்த வேண்டும், அத்தகைய ஆர்வத்தைத் தூண்டும் வகையில

தான மூதறகண் இநநூலின ஸாரமான அர்த்தங்களேக கொணடதான இச்சுருகக நூல் எழுதபபட்டது.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயததின நீணட கால வரலாறறில பல சரிவுகளேயும் எதிாபபுகளேயும் நமமுடைய முனனோர்களான மேலேயாாகள சநதிதது, அவறறால திருமால அடியார்கள் குழப்பமடையாதவாறு உணமை நிலேகளே உபதேசித்தும் கரநதங்களாக எழுதி உபகரிததும் பெருந தொணடாறறி யிருககினறனர்.

கி.பி. 14-ஆம நூறறாண்டிலிருநது தொடங்கி போலியான வைஷ்ணவர்கள் சம்ப்ரதாய க்ரந்தங்களுக்கு முற்றிலும் முரணபட்ட பொருளே பரசாரம செய்து பாமரர்களே மயககி அருவருககததக்க துராசாரங்களே அநுஷ்டானம என்ற பெயரால நிகழ்த்தி வந்தனா. எம்பெருமானுடைய வாத்ஸலயததிற்கு விரைவில இலககாக வேண்டினல் தோஷங்களேச் செயதுகொணடே இருக்கவேண்டும், "ஸர்வ தர்மாந் பரித்யஜய" என்ற விதியை உணமையாக்க மது மாம்சங்களேத் தின்னுதல, பிறன மனே நயததல போன்ற அருசத்தக்க அபாயமான ஒழுககஙகளேத் தழுவவேண்டும், ஒருமுறை ஆசார்ய ஸம்பநதம் ஏற்பட்டால போதும, அது பினனர் எப்படிப்பட்ட இழிசெயல்களேச் செய்தாலும மோக்ஷததைத உணடாககியே கொடுக்கும; ஸர்வேச்வரனும் எளிவரும இயலவினனுய்க குற்றங்களேயே நறறமாகக கொணடு ரக்ஷிததருளவான் எனற போலி வாதஙகளேப பரபபி அறியாதவர்களே வஞ்சிககத் தொடங்கினர்

அபபோது ஸ்ரீவைஷ்ணவ ஸதஸம்ப்ரதாயமுடைய பெரியோர்கள அவாகளுடைய கோடபாடுகளேக கண்டித்து வநதனர். அமமுறையில ஒரு நூல வடிவமாக அவதரிததது விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம் என்ற க்ரநதமாகும. போலி வைணவாகளாயப புலலுருவிகளாய முளேத்தவாகளின வரலாற்றுச் செய்திகளே முதன

முதலாக வெளிப்படுத்திய மஹான கோயில ஸ்ரீவரயோகி ராமாநுஜ தாஸா எனபவர் ஆவாா. ஸ்ரீவிஷ்ணு தத்வ விளககம எனற நூலே அபபெரியார் இயறறி 187 --ஆம ஆணடு வெளிப்படுததினாா. அதில சணடி ப்ரசணடி மத வாத கண்டனம எனற பகுதியில பல அரிய செய்திகளைக் காணலாம்.

விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம எனற தொடருககு மோக்ஷம் அடைவதற்கு, அதாவது வைகுநதம் புகுவதறகுச் சிறப்பான தகுதிபபாடுடையவனே அறுதியிடுவது எனற பொருளாகும்.

அத்தகுதிகளே விரித்துரைப்பதைக் காரணமாகக் கொணடு அரிய பல கோட்பாடுகள் தடைவிடைகளுடன தெளிவாக இந்நூலில நிறுவப்பட்டுளளன. நூல முழுதும் ப்ரமாணஙகளோடும அவறறின பொருளோடும எழுதப் பட்டு வெளிவரும் நாளே விரைவில் அளிககுமாறு எம பெருமானுடைய திருவடிகளில வேண்டி வணஙகி நிற் போம!

இச் சுருக்க நூலே விரைவில எழுதுமபடி அடியேனே ஊககுவித்து அனபால அரவணைத்து ஆட்கொண்ட பெரியாா ஸ்ரீமாந் ஸ்ரீலக்ஷ்மீநாராயண ராமாநுஜ தாசரின் திருத்தொணடுகள் ஸ்ரீவைஷ்ணவ சமயததின் இராஜ கோபுரத திருப்பணி போல விளஙகுகிறது. அன்னார் பல்லாண்டுகள் எழுந்தருளிப் பரந்தாமனைப் பறறியும், பராங்குச பரகால படடநாத யதிவராதிகளேப் பறறியும் அரிய நூல்களே அசசிடடு வெளியிடப் பெரியாழவார் போற்றிய கூடலழகரின திருவடியிணைகளில பணிந்து பரவுகினறேன்.

28/A, அக்ரஹாரம்,
பழங்கானந்தம,
மதுரை—3
27-2-87

அடியேன்—பேராசிரியர்,

**டாக்டர் இரா. அரங்கராஜன்,**
M.A., Ph.D.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பொருளடக்கம்

ஸ்ரீ.

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்.

# வைகுந்தம் புகும் மண்ணவர் யார்?

---

## 1. ஜாயமாந கால கடாக்ஷம்-கருவிலே திருவுடைமை

திருமகள் கேள்வனான எம்பெருமான் உயர்வற உயர் நலம் உடையவன்; தன் நிகரற்ற தலைவன்; தடுப்பாரில்லாத உரிமை பெற்றவன்; இத்தகையோன் கருணையே வடிவமாகவும் விளங்குகிறான். ஆதலால் பிறவிப் பெருங் கடலில் விழுந்து கரையேற மாட்டாது மாறி மாறிப் பல் வகைப் பிறப்புகளிலும் உழன்று திரியும் சேதனர்களில் சிலரைக் கைதூக்கிக் கரையில் ஏற்றுவதாகத் திருவுள்ளம் பற்றுகிறான். அப்போது ஜீவர்களின் மீது அவனுக்குக் கிருபை ஏற்படுகிறது. ஜீவர்கள் தாம் ஸம்பாதித்த புண்ய பாபங்களாலே துக்கங்களை அநுபவித்துக்கொண்டு படுகிற அவஸ்தைகளைக் காணும்போது எம்பெருமானுக்கு ஜீவர்களின்மீது எல்லையற்ற கிருபை இயல்பாகவே ஏற்படுகிறது. அதனால் காரணம் ஏதும் கருதாத தன்னுடைய இயற்கை இன்னருளால் ஜீவர்களில் சிலரைப் பிறக்கும் போதே அங்கண் இரண்டும் கொண்டு நோக்கி அருள்கிறான். இதனையே ஜாயமாந கால கடாக்ஷம் என்பர். ஜாயமாந கால கடாக்ஷம் பெற்ற பாக்யசாலிகளே கருவிலே திருவுடையவர்கள். கருவிலேயே திரு வாய்க்கப் பெற்றவர்களுக்கே மோக்ஷத்தில் இச்சை பிறக்கிறது.

## 2. அர்த்த பஞ்சக ஜ்ஞாநம்-ஐம்பொருள் அறிவு

மிக்க இறை நிலை, மெய்யாம் உயிர் நிலை, தக்க நெறி, தடையாகும் ஊழ்வினை, மோக்ஷவாழ்வு என்று சொல்லப்

படும் ஐந்து வகை நிலைகளைப் பற்றிய அறிவும், அவ்வறிவுக்கேற்ற நல்லொழுக்கமும் ஒன்று சேரவேண்டும். அப்படி ஒன்று சேரப்பெற்ற பிறகு தான் மோக்ஷமாகிய பெருவாழ்வு கிடைக்கும். அர்த்த பஞ்சக ஜ்ஞானமாகிற ஐம்பொருள் அறிவு ஏற்படாத பக்ஷத்தில் மரணமும் மறுபிறப்பும் தொடர்ந்து பிறவித்துயரங்களுமே உண்டாகும். இவ்வாறு சாஸ்த்ரங்கள் உறுதியாகத் தெரிவிக்கின்றன. அப்படியானால் மோக்ஷருசி ஏற்பட்டவன் அர்த்த பஞ்சக ஜ்ஞானத்தை எவ்வாறு பெறலாம்? என்ற கேள்வி எழுகிறது.

வேத வேதாந்த ஸாரங்களை உள்ளபடி நன்கு உணர்ந்தவனாய், பரமாத்மாவான எம்பெருமானையே இடையறாது சிந்திப்பவனாய், இதர உலகியற் பொருளில் வெறுப்பையும் உடையவனாய் விளங்கும் ஒரு நல்லாசிரியனை (ஸதாசார்யனை) அடைந்து அடிபணிந்து பணிவிடைகள் செய்து அவனிடமே அர்த்த பஞ்சக விஷயமான ஞானத்தை ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். அந்த ஆசார்யனும் தன்னை வந்து அடையும் சிஷ்யனுடைய எண்ணங்களை நன்றாகச் சோதனை செய்து பார்த்துத் தகுதியுடையவனாகத் தெரிந்தால் பரம்பொருளை அடைவதற்குச் சாதனங்களைத் தெரிவிக்கும் விசேஷமான அர்த்த பஞ்சக ஜ்ஞானத்தை உபதேசித்து அவனை மோக்ஷத்திற் குரியோனாக்கி உய்வடையச் செய்வான்.

## 3. சிஷ்ய லக்ஷணங்கள்-நன்மாணாக்கன் இலக்கணங்கள்.

மோக்ஷத்தை எய்துவதற்குத் தகுதியைப் பெற்று உய்ய விரும்பி ஸதாசார்யனை அடையும் சிஷ்யனுடைய லக்ஷணங்களை சாஸ்த்ரங்கள் தெளிவாக வரையறுத்துச் சொல்லியுள்ளன. அவற்றை முறையாக அறிந்துகொள்ள வேண்டும். அவையாவன:

1. தன்னுடைய உயிரையும் உடலையும் பிற உடைமைகளையும் ஆசார்யனுக்கே உரிமையாககி ஆசார்யன நினைவுகளையே வழியாகக கொணடு "எந்தமமை விற்கவும் பெறுவர்களே" எனகிறபடியே ஆசார்யனுக்கு விற்பதற்கும தகுதியான அடிமையாய ஆகவேணடும்;

2, ஸத் விஷயங்களில (நல்ல விஷயங்களில) புதநி யைப் படிய வைக்கவேணடும்;

3 ஸாதுக்களான பெரியோர்களுக்குத் தொண்டு செய்யவேண்டும்;

4. நலலொழுக்கங்களிலிருநது நழுவாதிருகக வேண் டும்;

5. மெய்யறிவை (தத்வ ஜ்ஞானம்) பெருககிக் கொள்வதில வேட்கை பெருகவேணடும்;

6. ஆசார்யனுக்குப் பணிவிடைகள் செய்வதில் எப் போதும் விருப்பமுடையவனாய் இருக்கவேண்டும்;

7. தனனைப் பற்றிப் பெருமையாக நினைக்கும் அபி மானத்தை அகற்றவேண்டும்;

8. ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதறகு (தண்டன சமர்ப்பிக்க) எப்போதும் விரும்பி யிருக்கவேணடும்;

9. ஐய வினாக்களைக் கேட்டு அறிவைப் பெருக்கிக் கொள்ளுமை காலத்தை எப்போதும் எதிர்பார்க்கவேண் டும;

10. ஐமபொறிகளையும் மனத்தையும் எப்போதும் தனவசபபடுததி யிருககவேணடும்;

11. பிறருடைய உயர்வைக் காண விருமபாத பொறாமை எனனும கெட்ட குணத்தை அறவே அகற்ற வேணடும;

12. ஆசாாயன திருவடிகளில அடைக்கலப் பொரு ளாகத தனனை நினைககவேண்டும;

13. இறைவனுடைய ஆணைகளின வடிவமான சாஸ்தரங்களில விசுவாஸத்தைப் பெறறிருக்கவேண்டும்.

இவை அனைத்தையும "ஆத்ம குணங்கள்'' என்று சொலலுவாாகள, இவற்றில சமமும் தமமும முதனமை யானவையாகும. சமம எனபது புறக்கரணங்களையும், தமம எனபது அகக்கரணமான மனத்தையும் அடக்குவ தாகும்.

இவவளவு நறகுணஙகளும நனகு நிரமபிய ஒரு சிஷயன கிடைத்தால அவனுககே ஆசார்யன ஹிதங்களை உபதேசிககவேணடும். அபபடி இலலாதவனை சிஷ்யனுகச் சேர்ததுககொளளககூடாது.

## 4. ஸச்சிஷ்ய ஸம்பந்த ப்ரபாவம்-நன் மாணுக்க னால் வரும் நன்மை.

ஸசசிஷய ஸமபநததால் ஆசார்யனுக்கு நனமையே விளையும. இதை அறிநதுகொளளாது இதறகு விரோத மாகத் தகுதியறற சிஷயனை அவன கொடுக்கும த்ரவ யததை ஆசைபபட்டுச் சேரததுககொண்டால ஆசார யனுககு ஆத்மநாசம உண்டாகும. சிஷயனுடைய பாபங் கள ஆசாாயனை அடைகிறது எனறு நூலகளில் வலியுறுத் தப்பட்டுளளன. விலக்ஷணமான நல்ல சிஷ்யனுடைய ஸமபந்தத்தின் ப்ரபாவததை விளக்கும் ஒரு நிகழச்சி எம் பெருமானார் வரலாற்றில காணப்படுகிறது.

ஒருநாள் கூரத்தாழ்வானுடைய புராண ப்ரஸங்கத தில் ப்ரீதி அடைநத திருவரஙகர் ஆழவானுககுப் பரம பதத்தைப் பெரும் பரிசாக வழஙகினார. ஆழவானும் மிகுந்த அடக்கத்தோடு தனனோடு ஸமபநதம பெற்ற எல்லோர்க்கும் பரமபதத்தைப் பரிசாகப பெற விருமபி னார அவ்விதமே எம்பெருமான திருவுள்ளமானான. இதனைக கேளவியுற்ற எம்பெருமானார், "முனபு திருக் கோட்டியூர் நம்பிகளின ஆணையை மீறியபோது நரகம் புகுவதாக நிச்சயித்திருந்த நமக்கு இனிமேல ஆழவா னோடு உணடான ஆசார்ய ஸம்பந்தத்தால் பரமபதம் கிடைக்கப்பெற்றோம்!'' என்று மகிழ்ச்சியால தமது

காஷாய திருப்பரிவட்டத்தை முடிநது மேலே எறிந்து பிடித்துக் கூத்தாடினர்.

இப்படி நல்ல சிஷ்யனுடைய ஸம்பந்தத்தால ஆசார்யனுககு ஏற்றம் உண்டாவதைப் போல் இழிவான சிஷ்யனுடைய ஸம்பநதத்தால் ஆசார்யனுக்கும் இழிவுகள் உண்டாகி அனர்த்தஙகள் ஏற்படும் ஸத்புத்ரனைப் பெற்றெடுத்த தந்தைக்கு "புத்" என்று கூறப்படும் நரக வேதனை உண்டாகாது தடுக்கப்படுகிறது; அஸத்தான புதரனைப் பெற்றெடுததால தநதைக்கும், மற்ற உறவினர்களுககும்கூட விநாசமே ஏற்படுகிறது ஆசார்ய சிஷ்ய ஸம்பந்தமும பிதா புத்ர ஸம்பந்தத்தைப் போன்றதேயாகும்

இவ்வாறு இழிவான சிஷ்ய சம்பநதம் அபாயத்தை உண்டாக்குவதைப் போலவே ஒழுக்கங் குன்றிய ஆசார்ய ஸம்பந்தமும் அழிவுக்குக் காரணமாகிவிடும். ஆதலால் ஸதாசார்ய லக்ஷணங்களை அறிந்துகொண்டு நல்லாசிரியரான ஒருவரையே ஆசார்யனைப் பற்றவேணும்.

## 5. ஸதாசார்ய லக்ஷணங்கள் - நல்லாசிரியர் இலக்கணங்கள்.

1. ஸத்ஸம்ப்ரதாய பரமபரையில தோனறியிருக்க வேணடும். அதாவது ப்ரபநநஜந கூடஸ்தரான ஸவாமி நம்மாழவாா தொடங்கிப் பெருகிவரும் ஆசார்ய பரமபரையில் சோநதிருக்கவேண்டும. எம்பெருமானருடைய திருமுடி ஸமபநதமும், திருவடி ஸம்பந்தமும பெறறு இருகிளையாக ப்ரகாசிககும் குரு பரம்பரையில ஓராணவழி ஆசாாய குலஙகளிலோ அனறி, எமபெருமானரால நியமிக்கபபடட எழுபத்துநானகு சிம்ஹாஸநாதிபதிகளின வம்சங்களிலோ அவதரிததவர்களே ஸதாசாாய ஸமபதது நிறையப் பெற்று ஆச்ரயிக்கத் தககவாகளாயிருப்பர்.

2 ஸ்திரமான புத்தியுடையவனு யிருக்கவேணடும்;

3 உபதேசம செய்யும்போது சிஷ்யர்களுடைய த்ருஷ்ட பலனகளை நினைக்காது அவர்களை எமபெருமானுக்கு மஙகளாசாஸனம் செய்யும் (பல்லாண்டென்று காப்பிடும) பரம பாகவதாகளாகத் திருததிப் பணி கொள்வதையே நினைக்கவேண்டும;

மஙகளசாஸனததுக்கு ஆள சேர்ப்பதே ஆசார்யனுக்கு உயாநத பணியாகும். மேலும உபதேச காலங்களில் தனனை ஆசார்யனுகவும, சிஷ்யனை த தனனுடைய சிஷ்யன எனறும அபிமானிததல கூடாது. சிஷ்யனை ஸப்ரஹமசாரியாகவே (உடன் கறபவன) பாவிக்கவேணடும தனனுடைய ஆசாாயனுககுக் கீழ இருவரும அடிபணிநது அறவுரைகளைக் கற்பதாகவே எப்போதும கருதவேணடும்;

4. வேதாந்தங்களின் தாறபரியார்ததங்களைத் தெளிவாக அறிந்து அறிந்தபடியே போதிக்க வல்லவனுகவும் இருககவேண்டும்;

5. எம்பெருமானிடத்து எப்போதும நிஷ்டை கூடியவனு யிருக்கவேண்டும்;

6. ஸுகதுக்கங்கள் மேலிடுகிற காலங்களில மகிழ்ச்சியும் வருததமும கொளளாது சமநிலையில மனம் இருககவேண்டும்;

7 ஸத்வகுணமே நிறைந்திருக்வேணடும;

8. எப்பொருளிலும மெயபபொருளை அறிய வலலவனுகவும், அறிநத அம்சத்தை எடுத்துரைக்க வல்லவனுகவும் இருக்கவேண்டும;

9. சிஷ்டாசாரங்களாய் மேலையார் செயவனகள் வேண்டுவனவாயுளள ஆசாரங்களை அறிநது ஒழுகவேணடும்;

10 ஆஹார நியதி, ஸஹவாஸ நியதி, அநுவர்த்தன நியதி என்று மூனறு வகை நியதிகளைக் கடைப்பிடிககவேண்டும்;

உணவுக் கட்டுப்பாடு, உடன் வாழ்வுக் கட்டுப்பாடு, பின்பற்றும் கட்டுப்பாடு என்று இவற்றைக்கொள்ளலாம். அதாவது இன்ன உணவுகளை உட்கொள்வது, இன்னா ருடன் உறைவது, இன்னாரைப் பின்பறறுவது என்று வரையறைகள் செய்துகொளளவேண்டும்.

(i) **ஆஹார நியதியாவது** சாஸத்ரஙகளில் விலக்கப் படட உணவுகளை விலக்குவதும, தீயோர்களின தொடர்பு கூடிய உணவுகளை விலககுவதும, சிராத்த சாநதிகளாகிற சில நிமிதத காரணஙகள மறறும் கேசம், எச்சில ஆகிய வறறின ஸபர்சம் பெற்ற உணவுகளை விலக்குவதும் ஆஹார நியதியாகும்.

பிணச்சோறு, மணச்சோறு, விலைச்சோறு ஆகிய வறறை அறவே விலக்கவேணடும்.

**(ii) ஸஹவாஸ நியதியாவது:** தேஹத்தையே ஆத்மா வாகப் பிறழ உணர்ந்தவர்கள், பிற தெய்வஙகளைத் தொழுகின்றவர்கள், எம்பெருமானைத் தொழுதாலும் அவனபால பிற உலகியற் பலன்களை இச்சிப்பவர்கள், எம்பெருமானையே பயனாக இச்சித்தாலும் அவனை அடைய அவனையே பறறாது வேறு வழிகளைப் பற்றுகின்றவர்கள் ஆகிய ப்ரதிகூலர்களைக் கண்டால பாமபையும் பெரு நெருப்பையும கண்டாற்போல் நெருங்குவதறகு பயப் பட்டு விலகிச் செனறு ஞான அநுஷ்டானஙகள் வடிவிலே காணலாம்படி ப்ரகாசிக்கும பரம ஸாத்விகர்களான பாகவதர்களோடே எப்போதும் கூடியிருப்பதுவே ஸஹ வாஸ நியதியாகும்.

**(iii) அநுவர்த்தன நியதியாவது.** பொருள சம்பாதிப் பதற்காக அரசியல அலுவலகஙகளில் தொடர்பு வைத்துக் கொண்டு அஙகு திரியும ஒழுக்ககேடாகளான ஸாமானய ஸம்சாரிகளின பின கைகட்டிச் செல்லாது, பொருள் வரவானது வினைப்பயன எனபதை உணர்ந்து கொணடு அதறகாக அலையாது ஸதாசார்யனையே பின பறறி வாழும் நிலையே அநுவர்த்தன நியதியாகும.

11. ஆடம்பரமும் அஸூயையும் சிறிது மற்றவனு யிருக்கவேண்டும்;

12. மகளிரின் இச்சையிலும், அரவணைப்பிலும், மிக வும் தாழ்ந்த பொறியுணர்வுகளிலும் விருப்பமில்லாதவனு யிருக்கவேண்டும்;

13. பிறருடைய துயர் கண்டு பொறுக்கச் சக்தியற் றவனு யிருக்கவேண்டும்;

14 தன்னைச் சார்ந்த சிஷ்யன தவறி நடந்தால் அவனைக் கண்டித்து சிக்ஷிக்க வல்லவனு யிருககவேண்டும்;

15. தீவினைகளுக்கு அஞ்சி அவை தான் அறியாத படியும தன்னிடம் சாராதபடி விழிப்பாக இருக்க வேணடும்;

16. தனக்கும் பிறர்க்கும நன்மைகளே உண்டாக் கடவது என்று எப்போதும் சிந்திப்பவனு யிருக்க வேண்டும்.

## 6. ஆஹார நியதி விஷயத்தில் சில ஆக்ஷேப ஸமாதானங்கள்:

ஆஹார நியதியில் சாஸ்த்ரங்களில் விலக்கப்பட்ட மது மாமஸங்களான நிஷித்த த்ரவ்யங்களை உட்கொள் ளக்கூடாது என்று பார்ககப்பட்டது.

**ஆக்ஷேபம் 1.** ஆசாரத்தை நிலைநாட்டுவதற்காகத் திரு அவதாரம் செய்தவராகச் சக்ரவாத்தி திருமக னை இராமபிரானைக் கொண்டாடுகிறோம். சிறிய திருவடியான அநுமன் அசோகவனத்தில் பிராட்டியிடம் விண்ணப்பம் செய்தபோது, பிராட்டியைப்பிரிநத துக்கத் தில் பெருமாள் கடித்ததும் ஊர்ந்ததும் அறியாதவராய் மனம் சோர்ந்து மது மாமஸங்களை புஜிக்காது துயருறற தாகத் தெரிவிக்கிறான். "ந மாம்ஸம ராகவோ புங்க்தே ந சாபி மது ஸேவிதே" என்பது அநுமன வார்த்தை யாகும். இவ்வார்த்தையை ஊன்றி நோக்கினால்,

பெருமாள் பிராட்டியோடு கூடியிருந்த காலத்தில் மது மாம்சங்களை பஜித்துவந்தார் என்று எளிதில் ஊஹிக்க முடிகிறது. அப்படியானால், தர்ம ஸம்ஸ்தாபனம் செய்யப் பிறந்தவர் கடைப்பிடித்து ஒழுகிய ஆசாரமாகிய மது அருந்துதலும், ஊன உண்ணுதலும் பின்பற்றத தக்க தனறோ! அப்படியிருக்க, ஆஹார நியதியில் மது மாம்சங் களை விலக்கச் சொலலியது எப்படிப் பொருந்தும?

**ஸமாதானம்**—பெருமாள் ஸாமாந்யமான (பொதுவான) வர்ண தர்மங்களில ஊற்றம் உடையவர். அதாவது வாண அநுகுணமாக சாஸ்த்ரங்களில சொலலப் பட்ட தருமங்களை அநுஷ்டிபபதில கருத்துடையவராக விளங்கினார். அதனால க்ஷதரிய வர்ணத்தவர்களுக்குப் பொருந்திய மாம்ஸங்களும் பேரரசர்கள் நுகர்தற்குரிய பலவகை நறுமணம் மிக்க மலர்களின் ஸாரமான மது பானத்தையும் பெருமாள அங்கீகரித்தார்; தம்முடைய வர்ணத்துக்கு விரோதமாக மது மாம்ஸஙகளை நுகர்ந்தார் எனறு கூறமுடியாது. அதனால் வர்ண விருத்தமான (முரணான) துராசாரததைப் பெருமாளிடம் சுமத்த முடியாது. மேலும் பெருமாள் "வர்ண தர்மிகள்" எனறு சொல்லப்படும் நிலையில உளளவர். அவருடைய ஒழுக்கத்தைப் பரமைகாந்திகளாய், ஸத்வ நிஷ்டர் களாய், வேதாதயயனபராகளாய விளஙகும் ஆசார்யர் கள் அநுஷ்டிக்கவேண்டும என்று நினைத்தலும் கூடாது. பரமைகாநதிகள எனபோர் எமபெருமான ஒருவனையே எல்லாமாக நினைததுப் பிறிது ஒனறையும் பறறு விட்டிருக்கும உயர்ந்த நிலையில உள்ளவர்கள் இத்தகைய உத்தமர்கள் தூய ஸத்வ நிஷ்டை கூடியவர்கள்; கிராம குலஙகளால் வரும பெயரும புகழும் அனர்த்தஹேது என்று அவற்றை உதாசீனம செயது பகவத் பாகவத பரதந்தரர்களாய் (இறைவனுக்கும் அடியார்களுககும ஆட்பட்டவர்களாய) வர்ணாச்ரம ஆசாரங்களைக் காட்டிலும் சீரியதான வைஷ்ணவ ஸமயாசாரங்களையே மேம்

பட்டவையாகக கருதி அவற்றிலேயே ஊன்றியிருப்பார் கள். அவாகளும் மது மாம்ஸங்களை ஏற்றுகொளளலாம் எனறு நினைபபதும பெரும பாவமாகும்.

மது மாமசஙகளை நிந்தித்ததறகு ஒரு காரணம் உணடு. அவை சிறு தெயவங்களைக குறித்துச் சில புறச் சமய ஆகமஙகளில் விதிககபபட்டிருபபதால அவை சிஷடாகளால (பெரியோாகளால்) அறவே விலக்கப்பட் டுளளன தேவதாந்தரபரர்களால உட்கொள்ளப்படும் அநதத த்ரவயஙகள மறநதும புறம தொழாத பரமை காநதிகளால மறநதும நினைககப்படுவதிலலை.

**ஆக்ஷேபம் 2** — ஸ்ரீராமாயணததில பெருமாள் ருத்ர இநதராதி தேவாகளை ஆராதித்தார் என்று சொல்லபபடடுளளதே! அதுபோனறு பரமைகாநதி களான வைஷ்ணவாகளும அவர்களைத தொழுதால எனன? தொழுகிற காலத்தில அவர்களுக்கு அாப்பணிக் கப்படட மது மாம்ஸஙகளை உடகொணடால எனன? என்ற கேள்விகள் எழலாம.

**ஸமாதானம்** — ஸவதநத்ரரான பெருமாள அவதார காலஙகளில அநுஷ்டித்தவை என்று கருதி பிராட்டிக்குச் சமமான ஸ்வரூபத்தை யுடையவராய் பகவத் பரதநத்ர பரிசுதத ஆத்மாக்களான பரமைகாந்திகளால தேவ தாநதர பஜநம (பிற தெயவங்களை வழிபடல) செய்ய இய லாது. அவர்கள அநநயார்ஹ சேஷத்வமே (பிறருக்கு உரிமையாகாதிருத்தல) ஆத்மஸ்வரூபம் என்ற ஊறற முடையவாகள். ஆதலால அவர்கள பெருமாளைப் பின் பற்றி அகநி, இந்த்ராதி தேவர்களை ஆராதிககமாட்டாா கள், ஆராதியாது போகவே அவர்கள் மதுமாம்ஸாதிகளை ஏற்றுகொள்ள வேணடுமென்ற நிலையே ஏறபடாது.

இனனமும அவதாரஙகளுககு ஏற்றதான சில செயல களை அநுஷ்டிப்பதறகாக காடடினால, பரஹமஹத்தி, உயிர்கொலை, பிறன மனை நயத்தல, பிறர் பொருள

கவர்தல் ஆகிய இழிந்தசெயல்களும் அநுஷ்டானங்களாக ஆகிவிடும் ஆபத்து உள்ளது. இக்ஷ்வாகு குல திலகரான பெருமாள் ப்ராமமண ஜன்மத்தில பிறந்த இராவணனைக் கொன்ருர். அதனுல் ப்ரம்மஹத்தி (ப்ராமமணரை வதித்தல)பற்றததகுமா? கிருஷ்ணுவதாரத்தை அநுசரித்து பிறன மனை விழைதல், பிறர்பொருள் கவர்தல் ஆகியவை பற்றததககதாத ஆகிவிடுமா? ஆகையால, அவையெல லாம செயயததககவை என்ருகிவிட்டால் பஞச மஹா பாதகஙகளும் ப்ரபந்ந தர்மங்கள எனருகி மஹா நாசங் களே பலனுகி விடும். அவதாரஙகளில் எமபெருமான் செய்த மேறகுறித்த செயலகளெல்லாம் அவன ஒருவனு லேயே செய்யத்தக்கனவாகும், நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால அவற்றிலும தீங்கின்றி நன்மையே மிகுந்து அறச் செயல்களாகவே அடியார்களால கொள்ளப்படும.

**ஆக்ஷேபம் 3** — சரம சுலோகததில "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' எல்லாதர்மங்களையும அறவே விட்டுப் பற்றுக என்று விதிக்கப் பட்டிருக்கிறதே! (எலலா தர்மங்கள்) என்று கூறியதில் வர்ணுநுகுணமான தர்மமாகிய மது மாமஸ பக்ஷணத்தையும் விடவேண்டுமென்று தெரிகிறது. அப்படியானுல் அதை விடுவதற்காகவாவது முன்னர் அதனைச செய்யவேணடாமோ? செய்து வநத தருமம் ஒனறைத்தானே விடமுடியும! ஆகவே,சரம சுலோகததில ஸர்வ சபதததுககு ஸங்கோசம் (குறை) வராதபடி நிவருததிரூபமான தர்ம தயாகத்துககாக மது மாம்ஸங் களை உட்கொணடால ஒரு குறறமுமிலலை.

**ஸமாதானம்** — "ஸாவ தர்மங்களையும அறவே விடடு" என்கிற தொடரில வரும் **தர்மம்** என்ற சொல்லை நனகு ஆராயந்து பார்க்கவேணடும.

**தர்மம்** எனபது யாது? இம்மை, மறுமை, உமமை (இஹ பரஙகள) பயனகளில எதறகு எது சாதனமோ அது தருமம எனப்படும். அதாவது பலத்திற்குச சாதன

மாக உள்ளது தருமம ஆகும். ஆனால் கீதா சரமசுலோகத்தில் வரும் தருமம் என்ற சொல் இம்மை மறுமைப் பயனகளை விளைவிக்கும் சாதனத்தைக குறிககாது; உம்மைப் (வீடு பேறுன மோக்ஷம்) பயனை உண்டாக்குமசாதனத்தையே சுட்டிக் காட்டுகிறது. ஸ்ரீகீதாசாரியன அர்ஜுனனுக்கு மோக்ஷோபாயத்தை உபதேசிக்கும் ப்ரகரணத்தில வருவதால் அப்படிக் கொளளப்படுகிறது. ஆகவே இம்மைப பயன்களான பசு, புத்ரர், மனை, மனையாட்டி, அன்னம், ஆரோக்யம் ஆகியவற்றையோ, மறுமைப் பயனகளான சொர்க்காதி வாசஙகளையோ விளைவிககும் ஸாதனமான தருமத்தை இங்கு கருத்திற் கொளளக்கூடாது. மோக்ஷமாகிய பெரும் பயனை விளைவிக்கும் ஸாதனமான தருமத்தையே கருத்திற் கொளள வேண்டும்.

அந்தத தருமமும் பலவாக சாஸ்த்ரங்களில் கூறப்படுகிறது அவையாவன:— கர்ம, ஞான, பகதி யோகங்களும, அவதார ரஹஸ்ய ஜ்ஞானமும, புருஷோததம வித்யையும், திவ்ய தேச வாசமும், திருநாம ஸங்கீர்த்தனமும், திருவிளக்கு எரிககையும், திருமாலை எடுககையும், மறறும் உபாய புததியோடு செய்யபபடும் இத்தகைய நற்செயலகளும் ஆகும.

மேறகுறித்த தருமங்களைச் செய்யும் காலத்தில் அவற்றைச் செயயத் தகுதியை உணடாககித் தரும் நித்ய நைமித்திக கர்மங்களையும் '**தருமம்**' எனபது உள்ளடக்கி நிறகிறது.

எனவே, சுருதி ஸமருதிகளில மோக்ஷோபாயமாகச சோதிததுச் சொலலப்பட்டனவாயும நித்ய, நைமித்திக கருமஙகளை வடிவாகக கொணடனவாயுமுளள கர்ம ஜ்ஞான யோகஙகளையே "ஸர்வ தர்மங்கள்" எனற தொடா விளக்குகிறது. இந்த தர்மஙகள மோக்ஷபாயம என்று சொலலுமபோதும ஒரு விஷயத்தைக் கவனமாக நெஞ்சிற கொளளவேண்டும.

இவை எலலாம நேராக மோக்ஷ உபாயஙகள அல்ல. எம்பெருமானே நேரான (ஸாக்ஷாத) உபாயம் எனபதை உறுதியாகக் கருததில கொளளவேணடும.

கருணையே வடிவமான எமபெருமான விரைவில பிறவிப்பிணியை ஒழிககும தனனை நேரே பறறுமாறு கூறி ஞல், அளவு கடந்த காலமாயத் தன முயறசியிலேயே காரியஙகளைச் செயது பழகிப்போன சேதனன (ஜீவன்) எலலாவற்றையும அறவே விட்டுத் தனனைப் பரம விசு வாஸததுடன பறறுவது எனபது மிகவும அரியதாகும. ஆதலிஞல் அததகையவர்களையும கைவிட மனமிலலாத கருணையாளஞகிய ஸர்வேசுவரன அவர்கள முயறசிககுத் தடை போடவிலலை, அவர்கள் முயனறு இயறறும் மற்ற உபாயங்களில சிததோபாயமான தனனைக கலநது அவர்களுக்கு மோக்ஷததின ஸாதனமாக கர்ம ஞான பக்தி யோகஙகளைச் செய்யுமாறு விதிககிருன. அதஞ லேயே அவை மோக்ஷ உபாயங்களாகினறன.

கசப்பு மருந்தை மேல வெலலத்தைத் தடவிச் சிறு குழநதைக்குக கொடுததால் அக்குழநதை விரும்பி உட் கொளகிறது; பிணியும மறைகிறது, நலமும விளைகிறது. பிணியைப போககி நலத்தை விளைவித்தது உள்ளே கலந் திருநத கசபபான மருநதே ஒழிய புறபபூச்சான வெல்லம் அனறு இநத முறையில மருநது பயனளிககச் சறறு கால தாமதம ஏறபடுகிறது. நேரே மருநதே உட்கொளளப் பட்டால உடனேயே பிணிதீரநது நனமை கிடைக்கிறது.

இநத உதாரணததை மனததில பதிததுக் கொள்ள வேணடும் கர்ம ஞான பக்திகள வீடுபேறறை அளியாமல் அவறறுடன கலநதிருக்கும் ஈசுவரனே உபாயமாயிருநது அதைதத தருகிருன. மேலும காம ஞான பகதிகளோடு கலநத பகவானும தாமதிததே பலன அளிப்பான. அவறறை விட்டு அவனையே பறறிஞல அப்போதேயோ அனறி விரைவிலேயோ பலன கிடைககும.

இனிமேல ஸர்வ தர்மஙகளேயும் விட்டு (பரிதயஜய) எனறு சொல்லுகையால் சிலர் 'அதர்மஙகள புகும'எனறு நினேக்கிருர்கள. ஏன் அதர்மங்கள புகும்? எனருல, தரும மானது இதைச் செய, இதைச் செயயாதே எனறு இரு வகையாயப் பேசப்படுகிப்து. இம்முறையில இவ்விரண டிற்கும் பொதுவாய் 'தருமம்' எனற சொலலே வழஙகி வருகிறது. ஆக நற்கருமஙகளேச்செய்கை, தீயகருமங்களேச் செய்யாது ஒழிகை என்று இருவகைபபட்டது தருமம் என் று தெளிவாகிறது. இனி, ''தருமங்களேவிடு'' எனருல் நற கருமங்களே விடுவதைப் போனறே தீயகருமங்களேச் செய்யாது ஒழிகையும் விடப்பட வேண்டியதாகிறது. அதனுல தீய கருமங்களேச் செயயவேணடிய நிலே உரு வாகி விடுகிறது. எனவே, ''ஸாவ தர்மாந பரித்யஜய'' எனற விதியைப பினபற்ற விருமபினுல, அதாமங்களாகிற தீய கருமங்களேச் செய்யவேண்டும; அபபோதுதான் கீதா சரம சுலோகத்தின 'பரிதயஜய'எனறு விதியை அநு சரித்ததாகிறது. இதனுல மதுமாமஸ பக்ஷணங்கள, ஜாதி துஷ்ட ஆசரய துஷ்ட நிமித்த துஷ்டங்களாகிற நிஷிதத த்ரவ்யஙகளே உடகொளவதால பிழையிலலே. அவை யாவும வாஞ்ஞநுகுணமான காமங்களே. இவ்வாறும சிலர் ப்ரமிககிருர்கள.

'ஸாவ தர்மாந் பரிதயஜ்ய' எனறதொடரில அதாமங் களேச் செய எனறு சொலலவிலலே. எல்லாத தருமங் களேயும் விடுக எனறு செப்பியதனறி 'தீயகருமஙகளே செய்' எனறு சொலலவிலலேயே! ஆகவே மேறகுறிதத அதருமஙகளாகிற தீயகருமஙகளேச் செயயககூடாது.

**ஆக்ஷேபம் 4.** தெளிவாகச் சொலலவில்லேயாயினும், குறிப்பாற்றலால் பொருளே அவவாறு கிரஹிக்கலாம் அனறே! அஙஙனமாஞல 'அதருமஙகளேச் செய்' என்னும் பொருள் தேறவிலலேயா?

**ஸமாதானம் —** தரும சப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் குறிககாது. அதாவது கீதா சரம சுலோக ப்ரகரணத்தை

(சந்தர்ப்பம்) உற்றுநோககிஞலதருமம், என்ற சொல நற் கருமஙகளேயே குறிப்பதாகும். அப்படி ஒருக்கால் குறித் துக் காட்டிஞலும் அவற்றை ஒழிந்தவற்றைச சொல்லிய தாகக் கொள்ளவேண்டும். ஏன் என்ருல்; இம்மைக்கு நன்மை தருவன, மறுமைககு நன்மை தருவன ஆகியவற் றைச் செய்யுமபோது தீய செயல்களேச செய்யாதிருததல் என்பது இயற்கையாகவே ஏற்படுகிறது. அவறறை விட் டுக் கர்ம ஜ்ஞான பக்திகளேச் செய எனக் கண்ணன எம பெருமான் உபதேசித்தான; அவற்றையும் விடடுத தன ளேயே பற்றுமாறு இங்குக் கூறுகிருன. இந்த நிலேயில் "ஸர்வ தர்மாந் பரிதயஜய' எனற தொடருக்கு "பாவங் களேச் செய்' என்பதைக் கணணனுடைய கருத்தாக எப்படிக் கொள்ளமுடியும்?

இறுதியாக, சேதனனேயும் ஈச்வரனேயும், பலனே யும் ஆராய்ந்து பார்த்தாலும தீய கருமங்களேச் செய்வது ஒரு நாளும் ஏற்பட வழியில்லே. சேதனன் அதருமங்களாகிற தீய கருமங்களேச் செய்தால் சேஷி யான ஈச்வரனுக்கு வெறுப்பே விளேயும்; அதஞல் அவற் றைச் செய்வது சேதனனுடைய ஆத்ம ஸ்வரூபமாகிற சேஷத்துவத்திற்கு அடியோடு பொருந்தாது.

தனனே அடைவதற்குச் சேதனனுடைய தனமுயற்சி களேப் பொறுக்காத ஈசுவரனுடைய ஸவருபத்தைப பாாததால சேதனன தீய கருமங்களாகிற பாவஙகளேச் செயதல எனபது தோனற வழியிலலே. சேதனனுடைய முயற்சிக்குப் பலன இறுதியாக ஈச்வரனுடைய முக மலாச்சியே என்பதால், அபபலனுடைய ஸ்வரூபததைப பார்த்தாலும் சேதனன தீய கருமஙகளில் ப்ரவேசிககவே வழியிலலே, ஏனெனில தீய கருமங்கள் ஈசுவரனுககு முக மலாச்சியை உண்டுபண்ணுது. ஆகையால், மறற இடங் களில "அதாம நிவ்ருத்தியை'க் குறிப்பாகக் காட்டிஞ லும, ஈணடு அதனேக் காட்டாது நற்கருமங்களே இயற்று தல ஒன்றையே சுட்டிக் காட்டும்.

ஒன்றோடொன்று முரணபட்டுப் பேசி மக்களைக் குழப்பததில் ஆழ்த்திய ஆறு வகைச் சமய வாதஙகளையும் நன்கு ஆராய்ந்து அவை நசிக்கும்படியாக நல்ல சமய நெ களை முறையாக ஓர்நது அவற்றை கீதா சாஸத்ர மாக உலகுககு உபதேசித்தான கணணன்.

"பிணககற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி உரைத்த
கணககறு நலததனன் அநதமில் ஆதியம் பகவன்"

என்று இவ்வர்த்தத்தை நமமாழ்வார் வெளியிட்டிருக் கிறார் இப்படி நல்நெறியான வேதாநத மார்கத்தை ஆராயநது வெளியிட்ட ஸ்ரீ கீதையில் வரும் சரம சுலோ கததிற்குப் பெரியோாகளால தூஷிககபபட்ட செயல் களை உட்பொருளாகவும, ஊஹிக்கப்படும் பொருளாக வும் எடுதது்க் காட்டினால விபரீதஙகளும் விநாசஙகளுமே களைகளாக மணடிவிடும.

எனவே, ஆஹார நியதி நலலாசிரியனால் அவசியம் கடைப்பிடிககப்படவேண்டும.எச்சில, அமேத்யம்(இழிநத பொருள), ஜாதியிலேயே ஒதுக்கவேணடியதான வெங் காயம, பூணடு, முருங்கை முதலான உணவுப்பொருள் கள் ஆகிய இவை யாவும ஸத்வ குண பூர்ததியுளள உத்தமர்களால் அறவே விலககுவற்கு உரியனவாகும.

**ஆக்ஷேபம் 5.** எலலா வஸ்துக்களுமே பரமபொரு ளுக்கு இருப்பிடமென்று அறிந்துகொளளும் உத்தமர்கள் அநத வஸதுக்களில (உள்ளி, பூணடு, வெங்காயம் போன்ற) சிலவற்றை மட்டும் எப்படி விலக்கத்தகும்? ப்ரஹ்ம பாவனை கைவரப்பெற்ற மஹான்களுக்கு பர மாத்ம சிருஷ்டியில் எலலா வஸ்துக்களும் உபாதேயமில லையா? (உபாதேயம் - கொள்ளத்தக்கது). பகவத ஸம் பந்தம் இலலாத ஒரு வஸ்து உலகததில் கிடையாது. ஆகவே வஸ்துக்களில் சிலவறறை தயாஜ்யம் (விடத் தக்கது) என று விலககுவது பொருத்தமில்லை.

**ஸமாதானம்**-சேதனனுக்கு எநத நிலைமையில் உலகியற் பொருளகள் அனைத்தும ததீயதவ ஆகாரததாலே (தத்—இறைவன; ததீயத்வம—இறைவனோடு தொடர்பு; ஆகாரம்—வடிவு) அநுபவிககத தககவை எனபதை அறிந்து கொளளவேணடும.

ஸத்வ, ரஜஸ, தமஸ்ஸுககளாகிற மூனறு குணஙகளோடு கூடபபெறற பரக்ருதி மணடலததை விடடு முக்தனை (நீங்கிய) பிறகே முற்கூறியபடி ஸமஸத வஸ்துக்களும சேதனனால நுகர்வதற்கு இயலும். ப்ரக்ருதி மணடலத்துககுள வாழ்கினற காலம வரையில அவன படைக்கப்பட்ட எலலா வஸ்துககளிலும சிலவற்றை சாஸ்தரங்களைக் கொண்டு அறிந்து அநுபவிககாது விலக்கவே வேணடும்.

எலலாப் பொருள்களிலும் இறைவனைக கண்ட ப்ரஹ்லாதனும நம்மாழ்வாரும் பரம ஞானிகள. நமமாழ்வார் ஸர்வேசுவரனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் கொடிய விஷமும் கூரிய அம்பும எரிகினற அனலும் ப்ரஹ்லாதனுக்கு அநுகூலமாக மாறின.

"ஸர்வ பூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே |
பரமாதமநி கோவிந்தே மித்ராமித்ர கதா குத ||"

எனறு ஸமநிலையில் ப்ரஹலாதன் ப்ரகாசித்தான். நம்மாழவார, "அறியும செநதீயைத தழுவி அசசுதன என்னும மெய வேவாள" எனறு செந்தீயும ஆழவார்க்குக குளிர்நதது. "புகழு நல ஒருவன எனகோ" என்ற திருவாய்மொழியில, பொருவில சீர்ப் பூமி என்கோ?" எனறு தொடஙகி 'யாவையும யவரும் தானாய' என்றும், 'நல குரவும் செலவும் நரகும சுவர்ககமு மாய்' என்றும், 'நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய' என்றும் வரும் பாசுரஙகளில நிலம நீா தீ காற்று ஆகாசம எனற ஐமபெரும் பூதஙகளும் பூதங்களாலாகிய வஸதுககளும் மற்றுமுள்ள உயிர்ப் பொருள் உயிரலலாத பொருள்களும் ஸர்வேசு-

வரனுல் வ்யாபிக்கப்பட்டு அவனுக்கு ப்ரகாரமாகப் பொருந்தி சேஷமாயிருககிற நிலேகளே அநுஸந்தித்தார் நம்மாழ்வார். அதனுல் ப்ரஹ்மாத்மகம் எனறு கருதி நிஷித்த தரவ்யங்களான காளான், வெங்காயம், உள்ளி முதலானவறறை அநுபவித்தாரா? இலலேயனறே!

ஆழ்வார், "காணவாராய்!" எனறு ப்ரார்ததித்தார். எம்பெருமானும், "ஆழ்வீர்! நாம் நம்முடைய ஜகதா காரத்தை (உலகமாய் விரிந்த வடிவம) காட்டினேமே அதனேக கண்டு ஆறியிருந்தால் ஆகாதோ?" என்று ஸமாதானம் பண்ணினை. அதற்குப் பதிலாக ஆழ்வார் "எம்பிரானே! ராஜாவினுடைய சிறைக்கூடம் முதலான ஐச்வாயங்கள் எலலாம் ராஜபுத்ரனுக்குத தன பிதாவி னுடைய ஐச்வர்யம் எனறு ஆதரிக்கத் தக்கதாகிறது! அதுபோன்றே உலகத்திலுளள ஸமஸத வஸதுக்களேயும் உனக்கே சேஷம எனற பாவனேயில் விரும்பினேன். அவவளவே ஒழிய, விபரீத ஜ்ஞானத்தை உணடாககு வதாய, ஆத்மஸவரூபததை அறியவொடடாது மறைப் பதாயுளள ப்ரக்ருதி ஸமபநத வஸதுக்கள் உனனுடைய பரஞ்சுடர் உடமபுபோல எனக்கு அநுபவிக்கத் தக்கவை யாக ஆகுமோ? ஆதலால் பிரானே! நீ "கூராராழி வெண் சஙகேநதிக் கொடியேனபால நீ வாராய்!" என்று ப்ராாத்தித்தார்.

முக்தர்களுக்கே ஸமஸ்த வஸ்துக்களும ப்ரஹமாத் மகம் எனகிற ஸமரீதியான பாவனே ஏறபடுமென்று முன் னாக் கூறப்பட்டதே! அப்படியானுல் நம்மாழ்வார் முகதரா? என்ற கேள்வி எழுகிறது. நம்மாழவாருக்கு பிராட்டிமார், நித்யர், முக்தர், முமுக்ஷுக்கள் எலலா ருடைய பாவமும் உண்டு. இவற்றை அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் ஆசார்ய ஹ்ருதயததில் நிரூபித் துள்ளார். முக்த தசையில் ஸமஸ்த வஸ்துக்களேயும் ப்ரஹ்மாத்மகம் என்று அநுஸந்திக்கும் ஆழவார்தாமே தாய்ப்பால் முதலான ப்ராக்ருத வஸ்துக்களே இழிந்தவை

என்று உதாசீனம பண்ணி, "உண்ணும் சோறு பருகுநீா தின்னும வெற்றிலேயும் எலலாம கணணன" எனறு அநு ஸநதிததார். ப்ராகருதர்களான சம்ஸாரிகளேக காண விரும்பாது, "கொடுவுலகம் காட்டேல", "இவை என்ன உலகியற்கை?" என்றெலலாம் வருநதி சரீர விமோ சனததை (உடல் அழிவு) எம்பெருமானிடம் மனமுருகிப் ப்ரார்ததித்தார்.

ஆகையாலே ப்ரஹ்மாத்மகம் என்ற அபிப்ராயத தால ஸாதுக்களான பெரியோர்களுக்கு உலகியற பொருட்களில் சாஸத்ரங்களில விலககப்பட்ட இழிவான வஸ்துக்கள் ஏற்கததக்கனவாக ஒருநாளும ஆகாது.

ஆஹார சுத்தியினுல (உணவுத்தூயமை) ஸதவ சுத்தி ஏற்படுகிறது; ஸத்வததினுல ஜ்ஞானம ஏற்படுகிறது; ஜ்ஞானத்தினுல் மோக்ஷம் கிட்டுகிறது. இவவாறு சாஸ்த் ரங்கள் வரையறுத்துக் கூறுகினறன. ஆதலால ஞானத் திற்கு விரோதிகளான வஸ்துக்கள் அறவே ஒழிககப்பட வேண்டும்.

ஆழவாாகளுககு மயாவற மதிநலம இறைவனுல் அருளபபட்டதாகையால் அவர்கள் எலலாம (தாரக போஷக போக்ய வஸ்துக்கள) கண்ணன என்றே இருக் கும்படியாயிற்று. அபபடியிலலாத முமுக்ஷுக்கள (மோக்ஷ விருப்பமுள்ளவர்கள)ஸதவகுணம மிக்க பொருளகளேயே ஏறறுககொணடு வாழவதே அமையும. அதனுல உணவுப் பொருளகளில ஜாதிதுஷ்டஙகள விலககப்படடே தீர வேணடும். ஆக இபபடிப்பட்ட ஞான அநுஷ்டானங களால நிறைநதவனே ஸதாசர்யன் எனறு அறிய வேண்டும.

இதுவரையில விவரிக்கப்படட அர்ததஙகளேப் பின வருமாறு இயைபு படுததிக கொளளவேணடும:

1. ஜாயமாந கால கடாக்ஷம் (கருவிலே திரு) வாய்க்கப பெற்றவனுக்கே மோக்ஷத்தில இச்சை உண டாகும.

2. மோக்ஷம் அர்த்த பஞ்சக ஜ்ஞானத்தாலேயே கிடைக்கும்.

3. அர்த்த பஞ்சக ஜ்ஞானத்தைப் பெறுவதற்கு ஸதாசார்யனைப் பற்றவேண்டும்

4 பற்றும்போது ஸச்சிஷ்ய லக்ஷணங்கள் உண்டாக வேண்டும்

5. ஸதாசார்யனை விலக்ஷண லக்ஷணங்களால் அறிந்துகொள்ள வேண்டும.

6. ஸதாசார்ய லக்ஷணங்களில் முதன்மையாக வேத வேதாந்த ஜ்ஞானம், பரபந்நஜந கூட ஸதரான நமமாழ்வார் தொடக்கமான குரு பரம்பரையில சேர்நதிருததல், ஆஹார நியதி, சமதமாதி ஆத்ம குணஙகளும் அநுஷ்டானமும ஆகியவறறைக் கொள்ளவேண்டும.

7. ஆஹார நியதி விஷயமான ஆக்ஷேப ஸமாதானங்களை நன்கு அறியவேண்டும.

8. ஞானம் அநுட்டானம் இவை நனறாகவே உடையனான குருவே ஸதாசார்யனாகப பறறததககவன

## 7. ஆசார்ய லக்ஷணங்கள் பொருந்தாதவர்கள்

அறிவும அதறகு ஏறற ஒழுககமும் நிறையப்பெறற ஒருவனே ஆசார்யனாகப பறறததக்கவன "ஞானம் அநுட்டான மிவை நனறாகவே உடையனான குருவை" ஆசரயிக்குமபடி (பற்றும்படி) மணவாள மாமுனிகள் அருளிச்செயவர். இஙகு ஞானம எனபது இறைவனைப பறறிய மெயயுணாவாகும அதற்கு ஏறற அநுட்டானமாவது: பகவத் ஸ்வரூபததையும ஆதம ஸவரூபததையும நன்குணர்நது தனனை இறைவனுககும அடியார்களுககும சேஷம் என்று அபிமானிதது ஒழுகுதலாகும். அநுஷ்டானம இலலாது கேவலம அறிவை மட்டும் பெற்றிருப்பது முடவனைப் போனற நிலையாகும், அறிவைத் தேடிக் கொள்ளாது வெறும் அநுஷ்டானத்தை மட்டும் பெற

றிருப்பது குருடனைப் போன்ற நிலையாகும். ஆதலால் அறிவு, ஒழுக்கங்களில் ஒன்று குறைந்தாலும் ஆசார்யனாக எண்ணப்பட முடியாது.

இறைவனுடைய ஆணைகளான சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட வைதிக ஆசாரங்களை உதாஸீனம் பண்ணி அவற்றிற்கு விரோதங்களான விபரீத ஆசாரங்களைப் பின்பற்றுகிற ஆசார்யன் இறைவனுடைய வெறுப்புக்கு ஆளாகிறான்; தானும் நசித்துத் தன்னை யடைந்த சிஷ்யனுக்கும் ஆத்ம நாசத்தைச் செய்து அதோகதிக்கு ஆளாகிறான். சிலர் தம்மை ஆசார்யராகப் பெருமையுடன் அபிமானித்து அதனால் செருக்கு அடைகிறார்கள்; பொருளுக்காகவும் புகழுக்காகவும் போற்றப்படுவதற்காகவும் தகுதியற்ற சிஷ்யர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்கள் அளித்த பொருளைக் கொண்டு குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ளுகிறார்கள். அப்படிப்பட்டவர்களை அடையாளம் கண்டு ஒதுக்கவேண்டும். அவர்களை ஆசார்யர்களாக ஒருபோதும் பற்றக்கூடாது.

இனி, நனகு பற்றத்தக்க ஆசார்யர்களின் அடையாளங்களை மீண்டும் நினைவிற் கொள்ளவேண்டும்.

நாதமுனிகள், ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பிள்ளை லோகாசார்யர், மணவாள மாமுனிகள் ஆகிய ஆசார்யர்களின் திருவாக்குகளையும் அநுஷ்டானங்களையும் நன்றாகப் பரிசீலனை செய்து,

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களிலும், அவற்றின் பொருள் விளக்க நூல்களான ஸ்ரீவசனபூஷணம் முதலிய ரஹஸ்ய க்ரந்தங்களிலும் (ஸம்ப்ரதாய அர்த்தங்களைக் கூறும் நூல்கள்) சேதனனுடைய உய்வு கருதிச் சொல்லப்பட்ட ஸம்ப்ரதாய மரியாதைகளை (மரபு ஒழுக்கங்கள்) மீறாது கடைப்பிடித்து;

வேத சாஸ்திர முரண்பாடுகளான தீயவொழுக்கங்களை அறவே விட்டு,

பிறரை ஒழுககத்தில நிலைநிறுத்தி உயவிக்கும் கருத்துடன சிஷ்டர்களான பெரியோாகளாலே பினபறறப்பட்ட கர்மாநுஷ்டானஙகளில, அதாவது மேலையார் செய்வனவற்றில் வேணடுவனவான காமங்களை அவறறில் உபாய புத்தியை (ஸாதனம் எனற எண்ணததை) விடடு இறைவனுடைய ஆணையை நிறைவேறறச் செயயும் கைஙகாயங்களாக அவறறை மதிததுச் செயது,

சிஷயன சமாப்பிதத தரவ்யஙகளில பறறு வைக்காது அவறறை அவனுககே மீளவும கொடுதது அவற்றை பகவத் பாகவத கைஙகாயங்களுககு உபயோகிககச் செயது;

தனனுடைய தேஹ யாத்ரையை (உயிர் வாழகை) ஸதவநிஷ்டாகளான ஸாதுககளால ஸமாப்பிக்கப்பட்ட பொருளைக கொணடு எளிமையாக நடத்திக்கொண்டு;

உலகியல காரணமாக சிஷயனிடத்தில ஒழுக்கக் குறைவு சிறிது ஏறபட்டாலும அவனை தண்டிததும திருத்தியும் பணி கொணடு;

சிஷயனுடைய ஆதமாவை உயாகதி அடைவிககச் செயவதையே கடமையாகக கொள்பவனே மிகச் சிறந்த ஆசாாயன ஆகிறுன.

## 8. இரண்டு வகை ஆசார்யர்கள் — சேர்ப்பாரும் உய்விப்பாரும்

ஆசாாயாகளை கடகர்கள் (சோபபாா) என்றும், உபாயபூதாகள (தாமே வழியானுர்) என்றும் இரு வகையினராகப் பிரித்துக் கூறுவர் பெரியோர். கடகதவம் உபாயதவம் எனறு அவ்விரு நிலைகளும அழைககப்படும.

(அ) **கடகத்வம்:—** திருத்திப் பணி கொளவதற்குத் தகுதி பெற்றவர்களாயிருநதால அவாகளின் கருத்தை

ஆராய்ந்தறிந்து உலகியற் பற்றுக்கள் அற்றுப் பேற்றுக் குப் பதறுவதைப் பரிசோதித்தறிந்தும் அவர்கள பயன் வேறு கருதாத தக்கோர்கள எனறும், பகவானுக்குப் பலலாண்டு எனறு காப்பிடும் தன்மையோர்கள என்றும் தோனறின பினபு அவர்களைப் பகவானேடு சேர்த்துத் திருவடிகளைப் பற்றச் செய்து ஆத்ம ஸ்வரூபத்துக்குச் சேரும்படி கறபிததல் **கடகத்வம்** என்று சொலலப்படும்.

(ஆ) **உபாயத்வம்** — ஆதம ஸ்வரூபங்களைத் தெரிவிக்கும் சாஸ்தரஙகளைக் கற்பதற்கும், கறருல அதனபடி நடப்பதற்கும் முடியாத அறிவுக் குறைவாளர்களான குருடர், ஊமையர், செவிடா, அங்கஹீனர் ஆகியோர் களுக்கு இறைவன் அருளால் ஒருக்கால ஸம்ஸாரமாகிற பிறப்பிறப்புக்களில் அச்சமும் வெறுப்பும் ஏற்பட்டு உய்வதற்கு வேட்கை எழுந்தால், அவர்கள் உபதேசங் களுக்குத் தகுதி யற்றவரா யிருப்பதைப் பரிவுடன் நோக்கி அவர்களுக்காகத தானே இறைவனுடைய திருவடிகளைப் பற்றிச சிறு குழந்தையின் நோய தீர்க்கத் தாயே மருநது பருகுவதைப் போல் ஆசார்யன தானே அவ்வாறு சரணவரணம் பணணித் தனனுடைய அருட் பார்வையால் அவர்களை ஸம்ஸாரததிலிருந்து கரை யேறும்படி உய்வித்தல் **உபாயத்வம்** என்று சொல்லப் படும்.

## 9. எம்பெருமானுர் ஊமைக்கு அருள் செய்தது

ஒரு நாள எம்பெருமானுர் திருமுனனர் செவிடும ஊமையுமான ஒரு சிறுவன ஆர்த்தியோடு தணடனிடட தைக் கண்ட எம்பெருமானுரும அச்சிறுவன ஞான அநுஷ்டானங்களுக்கு யோக்யதை யிலலாதவனுன நிலமையை உணர்நது அவன மீது தயை மீதூாந்து தம் முடைய திருவடிகளைக காட்டி, சைகையால அவற்றை "இதயத்திலே இட்டுக்கொளக' என்று அவன தலையிலே திருவடிகளை வைததார். அப்போது அதைக கணட

கூரததாழவான, ''ஐயோ! நாம கூரகுலத்திலே பிறந்து சாஸதரங் கறறுக கெடடோம! நாமும ஒரு ஊமையாயப் பிறநதால எம்பெருமானுர் திருவடிகள தாமே அடியேனைத தேடி வநதிருககுமனறே!'' என்று பரிதபித் தார்.

## 10. ஊமை, குருடு, செவிடராஞலும் இழி செயல் களை துறத்தலின் அவசியம்

அறிவு ஒழுக்கங்களுக்கு யோகயதையிலலாத ஊமை, செவிடர், குருடர்களான ஜன்மஙகள் சாஸ்த்ரப் பயிறசிககுத் தகுதி பெருதவாகளாஞலும் உலக வாழக் கையில சில காரியஙகளைச் செய்வதற்கும் தவிாவதற்கும் போதுமான இயக்கங்களைப பெற்றிருக்கிருர்கள் அல்லவா? அதஞல அவர்களும ப்ரதிகூலங்களாய் விரோத மான காரியஙகளைச் செய்யாது தவிர்த்தபோதுதான் மேற்கூறியபடி ஆசார்ய கடாக்ஷத்தால் உய்வு உண்டா கும. எனவே ப்ரதிகூலஙகளானவை எவை, எவை என்று அறிந்துகொள்ளவேணடும்.

## 11. ப்ரதிகூலங்கள் (முரண்கள்)

யான எனது என்னும அகப்பற்று புறப்பற்றுக்கள்; பிற உயிர்களைத் துனபுறுத்தாமை, பிறரைப் பழித்தல; பிறரைப் போறறல்; பிறன் மனை விழைதல, பிறர் பொருள கவர்தல; உணணத்தகாதனவற்றை உண்ணு தல்; பிற தெய்வங்களைப் பற்றுதல்; பிற வழிகளைப் பற்றுதல; பிறவறறில் காமங கொள்ளுதல: இறைவ ணிடத்தும் அடியாரிடத்தும் அபசாரப்படுதல ஆகியவை போனற தகாத செயலகளே ப்ரதிகூலஙகளானவை யாகும.

இவை இறையருள ஆசாாய கடாக்ஷத்தால் (திருக கண் நோக்கம) கிடைப்பதறகுத் தடைகளாயிருப்பதால் ப்ரதிகூலங்கள என்று அறியவேண்டும். இவற்றை

நிவ்ருத்தி செயயாதபோது ஸதாசார்யருடைய அபிமான மும ரக்ஷகம் ஆகமாட்டாது. இதை ஓர் உதாரணததால விளக்கமுடியும

ஒரு நிலத்தில நீர் நிரம்பியிருநதால, அதறகு அடுதத செயயில (நிலம) நீர் பாய்ச்சாவிட்டாலும் அருகிலுள்ள நீரானது பொசிந்து அஙகுளள பயிரை வளர்த்துப் பலனை உணடாக்கும். அருகிலுளள அநத நிலத்தில எவவளவுதான நீர் பொசிநதாலும, களைகள் மண்டியிருந தாலும், வேர்பபுழு மண்டினாலும் பயிர் வளராது; பலனும் உணடாகாது, அருகிலுளள நீர் வளப்பம் ரக்ஷிக்க மாட்டாது. களையும புழுவும் ப்ரதிகூலங்கள என்று உணாக.

**12. ஆக்ஷேபம்** — ரஸகுளிகை எனறு ஒரு மாத்திரையை ஸித்த புருஷர்கள ஆக்கித் தருகிறார்கள. அக்குளிகையானது தனனுடைய சமபநதததால இரும பைப் பொனனுக்குகிறது. இருமபானது எததகையதாக வும் அமையலாம். பசுவின் வாலை நறுக்கிய கத்தியின இரும்பானாலும, தருப்பைக் கொய்த கததியின இரும் பானாலும் ரஸகுளிகையானது தனனுடைய சம்பநதத் தால உடனே பொனனுககி விடுகிறது. பசுவின் வாலை வெட்டிய பாபமான ப்ரதிகூலம் இருநதபோதும் இருமபுக கத்தி ரஸகுளிகையால பொனனுக மாறிவிடுகிறது. அதே போன்று ப்ரதிகூலங்களைச் செய்யும் பாபிகளானு லும புணணிய புருஷர்களானாலும ஸதாசார்ய ஸமபந்த மானது கரையேறறிவிடும எனறும் சாஸ்த்ர வசனஙகள் தெரிவிக்கின்றனவே?

ஸமாதானம—மேலே காட்டிய உதாரணத்தில இருமபுக் கததியானது அறிவற்ற உலோகம அதனுல் பசுவின வாலை அறுத்த ப்ரதிகூலமான பாபம் அதறகுச் சேராது; அதை உபயோகித்தவனுசகே சேருகிறது. அதனுல ரஸகுளிகையின் சம்பந்தம அதைப் பொனனுக்கி விடுகிறது. அப்படியே சிஷயனும தனனுடைய உயிர்

வாழ்வும இயக்கமும் ஆசார்யனுக்கு வசப்பட்டதாய் தனக்கென்று ஸவதந்த்ரமானசெயலும்சிந்தனேயும் ஒன்று மில்லாது அறிவிலலாத ஜடததைப் போன்று ஆசார்ய பரதந்த்ரனுய விளங்கினுல அபபோது அவனுக்கு ஞானம, அநுஷ்டானம ஆகியவை ஒனறுமில்லே என்கிற குறை யற்று ஸதாசார்ய ஸம்பநதத்தாலே முக்தி யடைவன். ப்ரதிகூலமான விஃனகளேச் செயதால் விநாசமே பலன.

## 13. ஆழ்வானும் வீரசுந்தரனும்

சிஷ்ய லக்ஷணங்களுமை ஆசார்ய லக்ஷணங்களும் ஒனறு சேர்நது பெருமை பெறறவர் கூரத்தாழவான் எனபது ப்ரஸிதநமாகும. ஸச்சிஷ்யனுககு அவரே உதாரண புருஷா; ஸதாசார்யனுககும் அவரே உதாரண புருஷர். அத்தகைய கூரத்தாழ்வானுடைய திருவடிகளில சிஷ்ய னுக ஆச்ரயித்தான் வீரசுநதர ப்ரஹமராயன எனற அரசியல் அதிகாரி. அவன சோழமனனனிடத்தில அமைச் சனுகவும் புரோஹிதனுகவுமிருநது பணியாறறினுன அவனே திருவரஙகததில திருமதிள கட்டுமபோது பட்ட ருடைய வார்த்தையையும் புறககணித்து பிள்ளேபபிளளே ஆழவானுடைய திருமாளிகையை இடித்தான. இதை விட அபசாரம் ஒனறு உண்டோ? அதறகு மேலும் பட்டர் திருவரங்கத்தில வாழவொட்டாது உபத்ரவப் படுத்தவே, பட்டரும் திருககோட்டியூாககுச் சென்று சிலகாலம் வாழநதார். வீரசுநதரனும தன்னுடைய பிழைகளே உணராது நோய்வாய்ப்பட்டுப் பரிதாபமாக நசித்து மாணடுபோனுன். ஆழ்வான் திருவடிகளில ஆச்ரயித் திருநதும் ப்ரதிகூலங்களான காரியங்களில இறஙகித் தீயவிஃனகளேச் செய்ததால அவன ஆதம நாசததையே அடைநதான்; ஆழ்வானுடைய சமபநதம் அவனுககு உபயோகமாகவில்லே. இதனே உணாந்து கூரததாழவான தேவிகளான ஆண்டாள் மிகவும் வருந்தி யிருக்கிறுள.

ஆகையால் இழிவான செயல்களையே புரியும் ஒருவனுக்கு ஸதாசார்ய ஸமபந்தம் உண்டு எனற ஒரு காரணததால் ஈடேறமுடியாது.

## 14. ஆக்ஷேபம்

* அச்சேப்யநச்சேபி சரீரி வாகே
ஶ்ரேயஸகரீ ஸத்குரு பாதஸேவா |
ஸமித் பசுசசேதக சஸதர யுக்மே
ரஸேந ஹைமீகரணம் ஸமாநம ||

எனபது ஒரு சாஸ்தர ப்ரமாணம். இவவசனம் தான மேற்குறிதத ஐயததைக கிளப்பியது. இதில (அச்சேபி அநச்சேபி சரீரிவர்கே ஶ்ரேயஸ்கரீ ஸதகுரு பாதஸேவா) என்கிற பகுதியால சுத்தமுளளவனுலும் அசுத்தமுள்ள வனுலும ஸதாசாாயரின பாதசேவையால முக்தனுகிருன் என்று தெரிவிக்கப்படுகிறது.

**ஸமாதானம்** இங்கு சுத்தி அசுத்தி நிலைமைகள் அவன ஸதாசார்யரைப் பற்றுவதற்கு முனபிருநதவையாகும். ஸதாசார்யரைப பற்றிய பிறகும் அசுத்தியான நிலைமைகளைத் தொடர்ந்து பேணுவதை மேறகாட்டிய ப்ரமாண வசனத்திறகு ஆததமாக வலிந்து கொள்வது விரோதமாகும். ஸதாசார்யரைப் பற்றியது மெய்யாகஇருக்குமேயானுல அதன்பிறகு அசுத்திதொடர்ந்திருக்கலாம என்று சொலலுவதில அர்ததமேயில்லை. சுதநி அசுத்திகள் தீயினில தூசாகி வினைகளை அறறு அவன முகதனுகிருன்.

**பாபிஷ்ட:** க்ஷத்ரபநதுஶ் ச புணடரீகஶ் ச புணயக்ருத்
ஆசாாயவததயா முகதெள தஸ்மாத் ஆசார்யவாந்
பவேத் ||

எனகிற வசனததிலும ஆசார்யனைப் பறறுவதறகு முனபு பாபமே செயத மாபாவியானுலும அனறிப் புணயசாலி யானுலும ஸதாசாாயனை ஆச்ரயிதது அவனிட ததில் தனனை ஒப்படைதத பிறகு அவன முகதனுகிருன எனறே

அறியவேண்டும். அப்படியே பாபியாயிருந்த க்ஷத்திர பந்தும் புண்யசீலனாயிருந்த புண்டரீகனும் ஆசார்ய ஸம்பந்தத்தால முக்தியடைந்தார்கள்.

ஸதாசார்யரைப் பற்றிய பிறகு அறிந்து இழிவான செயலகளைச் செய்தால அவனுக்கு ஆசார்ய ஸமபந்தமே இலலையாகிவிடும்.

""ஊனமாயினகள் செய்யும ஊனகாரகர்களேலும்
போனகம் செய்த சேடம் தருவரேல புனிதமன்றே''

(திருமாலை-41) என்கிற பாசுரத்தில், ""ஜீவஹிம்சைகளைச் செய்யும் கொடியவர்களாயும், பிறரையும் ஜீவஹிம்சைகளைச் செய்யத் தூண்டுபவர்களாயும், இப்படி மஹாபாபிகளாயிருந்தாலும் அவர்கள், ""வானுளார் அறியலாகா வானவா! தேனுலாம்துளபமாலைச் சென்னியா!!'' என்று எம்பெருமானை அழைத்து அவனிடமே உபாய உபேய ப்ரார்த்தனைகளைச் செய்தார்களேயானால், அவர்கள ஆதரிக்கத தக்கவர்கள்; அவர்கள தாங்கள உண்டு மீத மான உணவுப் பொருளைத தருவார்களேயானால அது மிகவும புனிதமாகப் போற்றத்தக்கது ஆகும்'' என்று விசேஷித்துக் கூறப்படுகிறது. இங்கும ""ஊனமாயினகள் செய்யும் ஊனகாரகர்கள'' என்றால, அக்கொடிய செயல கள் அவர்கள் இறைவனைப் பற்றிய மெய அறிவைப் பெறு வதற்கு முன செயதவையாகவே கொளளவேண்டும. இறைவனைப் பற்றி நனகுணர்ந்து ஞானத்தெளிவு பெற்ற வர்கள ஒருநாளும ஊனமான (இழிந்த) காரியம் செய்ய வும் மாட்டார்கள், செயவிக்கவும மாட்டார்கள. ""ஜ்ஞாநம் பிறப்பதற்கு முனபுத்தை வ்ருத்தம்சொலலு கிறது. முன்பு செய்யிலும் இந்த ஜ்ஞாநம் பிறந்தபினபு ஸம்பவியாது'' என்று பெரியவாச்சானபிள்ளைத தெளி வுறுத்தியுள்ளார். அதுபோல ஆசார்ய ஸம்பந்தத்தை அடைவதற்கு முன் ஊனமான செயலகளைச் செய்திருக்க லாம. ஆனால் ஒருவன ஸதாசார்ய ஸம்பந்தத்தைப்பெற்று விட்டபிறகு அத்தகைய இழிசெயல்களை நெஞ்சாலும

நினைக்கமாட்டான்; நினைத்தால் அவனுடைய ஆசார்ய ஸம்பந்தம் **போலி** என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

ஆகையால் உலகியல் சூழல்களிலமுழ்கி உடற்பற்றுக்களில ஒட்டிக்கொண்டு அஹங்கார மமகாரங்களால உழன்று கொண்டிருக்கும் ஒருவன் நமக்கு ஸதாசார்ய ஸம்பந்தம் ஏற்கனவே உண்டு அன்றோ! என்று நினைத்து துரபிமானியாய் இருக்க வழியே இல்லை. அஹங்கார மமகாரங்கள சிறிது ஒட்டிக்கொண்டிருந்தாலும போதும்; அவை ஸதாசார்ய ஸமபந்தத்தையும் அழித்து விநாசத்தை உண்டாக்கிவிடும.

ஆகையால்தான '"ப்ரபந்நனுக்கு (ஸதாசார்ய ஸம்பந்தத்தால இறைவனையே உபாயமாகப் பற்றியவனுக்கு) ஸமஸார பீஜம நசிக்கவேணும்' என்று **திருக்கோட்டியூர் நம்பி** அருளிச்செய்தார்.

நான், எனது என்ற அகப்பற்று, புறப்பற்றுக்கள இரண்டும ஸமஸார பீஜங்கள் ஆகும்; அதாவது பிறவித் துயரைத் தோற்றுவிக்கும விதைகளாகும். இவையிரண்டும உள்ளவரை எப்பேர்ப்பட்ட அறிவாளிக்கும் பிறவித் துயா அழிந்து இறைவனடி சேர்வது கிட்டாது.

## 15. ஆழ்வார் உபதேசித்ததும், ஆளவந்தார், மாமுனிகள் மனமுருகி வேண்டியதும்

*நீா நுமது என்றிவை
வோ முதல மாயத்து இறை
சேரமினே*

என்ற பாசுரத்தில, "அஹங்கார மமகாரங்களை அறவே ஒழித்து அதன் பிறகே இறைவனைப பற்றுங்கள்' என்று உபதேசிக்கிறார் நம்மாழ்வார்.

ஆழ்வாா அஹங்கார மமகாரங்களை அறவே விட்டவர் என்பது ப்ரசித்தமான விஷயம். ஆயினும் அவை உண்டாவதற்கு ஏதுவான தேஹத்தோடு கூடி

யிருப்பதால மஹா ஜ்ஞாநியான ஆழ்வாரும ஒவ்வொரு சமயம் அச்சம அடைநது அவை தோனறிவிடுமோ எனறு ஸநதேஹப்பட்டு, "யானே எனதனதே எனறிருந்தேன்", "பல நீ காட்டிப் படுப்பாயோ இனனம் கெடுப் பாயோ?", "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய் வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுள எனனைப் பெற்ருல் என செய்யா", "வன குழியினில் வீழ்க்கும் ஐவரை வலமுதல கெடுககும் வரமே தநதருள் கண டாய்!" எனறெலலாம் எமபெருமானிடம் ப்ரார்த்திக் கிருர்.

ஆளவநதார் ஸ்தோத்ர ரத்நத்தில,

அமர்யாத க்ஷுத்ர. சலமதி:
அஸூயாப்ரஸவபூ:
க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவஸோ வஞ்சநபர:
ந்ருஸம்ஸ: பாபிஷ்ட: கதமஹமிதோ துக்கஜலதே:
அபாராதுத்தீர்ணஸ் தவ பரிசரேயம் சரணயோ: ||

என்று ப்ரதிகூலங்களான விஷயங்களை நினைத்துத் துக்கப் பட்டு அவற்றைப் போக்கி யருளுமாறு வேண்டுகிருர்.

மணவாளமாமுனிகள யதிராஜ விம்சதியில்,

சப்தாதிபோக ருசிரந்வஹமேத தேஹ
வருத்தயா பசு: நரவபு:
து:கா வஹோ ஹம அநிசம தவ
சப்தாதி போக விஷயா ருசிர மதீயா
நஷ்டா பவத்விஹ பவத்தயயா யதீந்த்ர!

என்று அவவாறே மனமுருகி எம்பெருமானுரைக குறிதது துப் ப்ரார்த்திககிருர்.

எனவே, பகவத ஸமபந்தமும் ஸதாசார்யாபிமான மும் ப்ரதிகூலங்களான பற்றுக்கள உள்ளபோது நறபயனை விளைவிக்காது எனறு உணாநது கொளளவேணடும்.

## 16. ஆசார்யனிடத்தில் ப்ரதிகூலமான ஒழுக்கக் கேடு தோன்றினால் சிஷ்யன் செய்யவேண்டியது

சிஷ்யன், ஆசார்யன் என்ற இருவர்களிடத்திலும் ஒருவருடைய ஒழுக்கம் சிதைந்தால் மற்றவரை அது பாதிக்கும். ஆசார்யரிடத்தில் துராசாரங்களும் ஒழுக்கக் கேடுகளும் காணப்பட்டால், அப்போது சிஷ்யன் அதனைப் பார்த்துக்கொண்டிருக்கக்கூடாது. ஆசார்யனை நல்வழிப் படுத்தவேண்டிய கடமை அவனுக்கு உண்டு. அதனை எப்படிச் செய்வது? ஆசார்யன் தனிமையாக இருக்கும் போது அவருடைய திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அன்பான வார்த்தைகளால் அவருடைய மனத்தில் பதியும் படி ஹிதங்களைச் சொல்லவேண்டும். மேலும் எம்பெருமானுடைய சந்நிதியில் சென்று ஆசார்யரிடத்திலுள்ள குற்றங்கள் நீங்கி குணங்கள் பிரகாசிக்கச் செய்யவேணு மென்று எம்பெருமானிடத்தில் ப்ரார்த்தித்துக் கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட தகுதி வாய்ந்த சிஷ்யனுக்கே எம்பெருமான் "தானே வைகுந்தம் தரும்" என்கிறபடியே வீடுபேற்றை நல்குகிறான். சிஷ்யனிடத்தில் விபரீதமான ஒழுக்கங்கள் ஏற்பட்டால் ஆசார்யன் அவன் கொடுக்கும் தக்ஷிணைகளுக்காக தாக்ஷிண்யம் பார்க்காது அவனை சிக்ஷித்துத் திருத்தவேண்டும்.

## 17. ப்ராணிகளுக்கும் விலங்குகளுக்கும் ஆசார்ய அபிமானமே உத்தாரகம்

ஒழுக்கங்களைச் சிதைத்துக்கொண்டும் துராசாரங்களைப் பின்பற்றிக்கொண்டும் இருந்தால் ஆசார்ய அபிமானம் ஒருகாலும் உயர்கதியை அளிக்காது. ப்ராணிகளுக்கும் விலங்குகளுக்கும் அப்படிக் கெட்ட வழிகளைப் பற்றும் ஸ்வபாவம் இல்லையாதலால் அவற்றிற்கே ஆசார்யாபிமானம் உத்தாரகமாயிருந்து உயர்கதியைத் தருகிறது.

## 18. நம்பிள்ளை அபிமானத்தால் ஆலமரம் மோக்ஷம் அடைந்தது

முனபு ஒரு காலத்தில ஸ்வாமி நம்பிளளை காஞ்சிமா நகரிலிருந்து திருவரங்கத்தை நோக்கித் திருமபிக்கொண் டிருந்தார். அப்போது வெயிலால் மிகவும் களைப்புறறு வருந்திஞர். நலல வேளையாகப பயணத்தின நடுவில ஓரிடத்தில ஆலமரம ஒனறு பெரிதாக வளர்நது நிழல பரபபிக கொணடிருப்பதைக கணடார். தம்முடைய சிஷயர்களுடன் அம்மரததின நிழலில நெடும்போது தஙகியிருந்து களைப்பை ஆற்றிக்கொண்டார். இரவுநேரம் சமீபித்ததால அஙகேயே பெருமாளுககு அமுது செய் வித்துத தாமும் சிஷயர்களுடன அமுது செயதருளி அன்று இரவு முழுவதும அவவிடததிலேயே தங்கியிருநதார். மறு நாள ப்ரயாணத்தைத் தொடங்குவதறகு முன முதல நாள நிழல் தநது பேருபகாரம் செய்த அநத ஆல மரததை ஆரத் தழுவிக்கொண்டு விசேஷ கடாக்ஷம் செயது நன்றியைப் புலப்படுததிககொண்டார. அருகி லிருநது ஒரு கிராமவாசி அதைப் பாாத்துப பரிஹஸித் தான. நம்பிள்ளையும திருவரஙக நோக்கிப் பயணப் பட்டார். அன்றிரவு ஓர் அதிசயம் நடநதது நமபிள்ளை யால தழுவப்பெறற ஆலமரம் இரு கூறுயப் பிளநதது. அதிலிருநது கோடி சூர்ய பரகாசமான பேரொளி ஒனறு விணணேக்கிப் பாயநதது. அப்போது வானத்தில தூரியங்கள முழங்கின, விணணோா அப்பேரொளியை எதிர்கொண்டு அழைத்துச் செல்ல அது சூரிய ஒளியிற் புகுநது மறைந்தது. நிலத்திலிருநத மரம் உலாந்து பட்டுபபோய விழுநதது. முனபு பரிஹாஸம் செய்த ப்ராமமணன் பெரு வியப்படைநது இச்செயதியை நம் பிள்ளைக்கு அறிவித்தான். நம்பிளளையும் அந்த ஆலமரத் துககு ஸ்ரீசூர்ண பரிபாலனம் செயது திருவத்யயனமும கொண்டாடிப் புத்ர கருத்யம செய்தார்.

நம்பிள்ளையின அபிமானததால் ஒரு மரமும உயர்நத பேரினபமாகிய பெருவீட்டை அடைநதது. எம்பெருமான ஒனறிறகு உயவளிகக நினைததானுகில அவனுல கூடாதது இலலை. அவனே ஒரு வயாஜத்தைக கற்பிதது அதன் வழியாக எலலாத் தகுதிகளையும வரச்செயது தன இணையடிக்குக் கீழ இருத்திக்கொளவான. ''உன மனத்தால் என் நினைந்திருநதாய?'' எனகிறபடியே அவன நினைவே அனைதது நன்மைகளுககும காரணம். அடியார்க்கு நிழல கொடுத்ததை வ்யாஜமாககி நமபிள்ளையின அபிமானத்தை உணடாககி ஆலமரத்துக்கு உயா கதியை உணடாககித் தந்தவன் ஸாவேசுவரன எனபதை மறக்ககக்கூடாது.''எமமா பாவியாக்கும்விதிவாயக்கினறு வாயககுங் கணடீர் மெயமமாலா யொழிநதேன'' என்கிறார் ஆழ்வார். எமபெருமானுடைய திருவருள அளவிறநது பாயத தொடங்கினுல் எத்தகைய கொடியோனுககும் மஹா ஜ்ஞாநிகளின் நிலைமைகள எலலாம கணபபோதில ஏறபட்டு உயர்கதியும் கிடடுகிறது. எம பெருமானுடைய பேரருளும ஆசாாய அபிமானத்தை முதறகண உணடுபணணியே படிப்படியாக எல்லாவிதமான நனமைகளையும ஏறபடுததிக கொடுக்கும். இவற்றை எலலாம ஸதாசார்யனுகிற ஒரு நலலாசிரியனுடைய தொடாபினுலேயே அறிநதுகொளள முடியும்.

ஸதாசார்ய ஸமபநததததை எய்தி நறபேறு அடையவாகள இவவுலகில மிகவும அருகியே யிருபபார்கள. ''ஓரொருவா உணடாகில அத்தனைகாண் நெஞசமே'' எனறு மாமுநிகளும இககருததை வலியுறுத்துகிறார்.

## 19. லீலைக்கு விஷயமும் க்ருபைக்கு விஷயமும்

உடமபையே பேணி ஊனினைப் பெருக்கி சாஸத்ர மரியாதைகளைப் புறக்கணிதது உலகியல இனபஙகளில உழனறு திரிகினறவாகள எமபெருமானுடைய லீலைககு விஷயமாவாாகள். அதாவது அவனுடைய விளையாட்டிற்

குக் கருவிகளாய் அமைந்து பிறப்பு இறப்புக்களில் சிக்கி உழன்றுகொண்டே இருப்பார்கள். உலகம் யாவையும் உளவாக்கலும நிலைபெறுததலும் நீக்கலும் அவனுடைய அலகிலா விளையாடல் தொழிலாகும் என்று உணர்க.

இதற்கு நேர்மாறாக ஆதமாவின மெய்ப்பொருளை உணர்ந்து ஆத்த பஞ்சக ஞானத்தை அடைநது முதல் விரோதியான தன்னுடைய உடலைக் கண்டால ஸர்ப்பத்தைக கண்டாற் போல அஞ்சி உடம்பும் மிகையாக உணர்ந்து பிறப்பு அறுக்கலுற்ற ஒருவன் எமபெருமானுடைய க்ருபைக்கு விஷயமாகிறான. அதாவது இறையருளுக்கு இலக்காகிறான். அதனால் ஆசார்ய ஸம்பநதம் தொடங்கி வீடு பேறுவரை எலலாம் கிட்டுகிறது.

## 20. ப்ரதம ப்ரபந்நரும் சரம ப்ரபந்நரும்

ஆசார்யன் அருளிச்செயதபடியே எம்பெருமானிடத்தில பரதந்தரனாய், "சேலேய கணணியரும் பெருஞ் செலவமும நன் மககளும் மேலாத் தாய் தந்தையும் அவரே இனியாவாரே" என்ற உணர்வைப் பெற்று 'எல்லாங் கண்ணன' என்றருளிச் செய்த ஆழவாரைப் போன்று இருபபவர்கள ப்ரதம ப்ரபந்நர்களாவர்.

இறையுணர்வை ஊட்டிய ஆசார்யனுடைய பேருதவியைப் பெருக்க நினைத்து அவன் விஷயததில அன்பும் நனறியும் உண்டாகி அவனையொழிய வேறு ஒன்றினையும் கருத்திற கொள்ளாது, "தேவு மற்றறியேன' என்றிருந்த மதுரகவி யாழவாரைப் போன்று இருப்பவர்கள் சரம பரபநநர்களாவர்.

இரு பருவத்தினருக்குமே ப்ராதிகூல்ய நிவ்ருத்தி முதலான அனைததும வேண்டியிருக்கும. ஆசார்ய நிஷ்டையானது எப்படியும் கைதூக்கிவிடும் என்று நினைத்து இழி செயல்களை மனத்தாலும் நினைக்கக்கூடாது. இழி செயல்களில் இழிநதவர்களை எம்பெருமான தனககு லீலைக்கு

விஷயமாக்கிவிடும் அபாயம் இருக்கிறது. ஆனால் ஆசார்யனோ தன்னைப் பற்றியிருப்பவர்களை ஒருநாளும் அப்படிச் செய்யாது இறையருளுக்கே இலக்காக ஆக்குகிறான். அப்படிச் செய்யும்போது ஆசார்யன தண்டித்தும் கண்டித்தும் திருத்திய பணி கொண்டு இறைவனுக்கு சிஷ்யனை போகப் பொருளாககியே சமாப்பிக்கிறான. இதனை ஓர் உதாரணத்தால விளக்கலாம்.

அரசன் ஒருவன நோய வாய்ப்பட்டிருக்கும் வேசியின மீது கண வைத்து அவளை அநுபவிப்பதற்குத் தகுதியுடையவளாக ஆக்கித் தரவேண்டுமென்று மருத்துவரிடம் ஆணை பிறப்பிக்கிறான. அம்மருத்துவரும் அவளைப் பத்தியம் போட்டு சிகைஷகள செயது நன்றாக சோதித்துக் குணமாக்கி அரசனிடத்திலே சேர்க்கிறான. அரசனும் மருத்துவரைப் பாராட்டுகிறான. அப்படியில்லாது, மருத்துவர் வேசியின பொருளுக்கு ஆசைப்பட்டுப் புறப பூச்சுககளாலே அவளை மினுங்கச்செயது நோயை மறைத்து அரசனிடத்திலே சேர்த்தால என்ன ஆகும்? மருத்துவன, வேசி இருவருடைய தலைகளுக்கும் ஆபத்தன்றோ உண்டாகும்! இதேபோல சிஷ்யனுக்கு நாம ரூபங்களை மட்டிலும் உண்டாக்கி அவனுக்குள்ளிருக்கும் உலகப பற்றுக்களை மறைத்து அதுவே போதுமென்று கருதினானாகில விபரீத பலனே உண்டாகும். அதாவது விநாசமே விளைந்துவிடும். அதனால ஸதாசார்யன 'ஸகாலிதயே சாஸிதாரம' என்கிற முறையில சிஷ்யனைப பரீக்ஷித்து நன்றாகத் திருத்திக் கொடுக்ககடவன. அத்தகைய ஸதாசார்ய ஸம்பந்தமே விளைவில பலன தர வல்லதாகையால அதுவே வேண்டப் பட்டது.

**அரங்கமாளிகை** என்ற அரையா குமாரன் எம்பெருமானார் திருவடிகளில ஆச்ரயித்திருந்தான. ஸஹவாஸ தோஷத்தால அவன் விஷயபரவனாயச் சிற்றின்பங்களில அழுந்திக் கிடந்தான. எமபெருமானார் அவனை வலியப் பிடித்து வரச்செயது பலவாறு சிக்ஷித்து

ஆத்ம ஹிதங்களை அருளிச்செய்து நன்றாகத் திருத்திப் பணி கொண்டார்.

ஸர்வேச்வரன் தன்னுடைய தடுப்பாரில்லாத பேருரிமைத் திறத்தால் அங்கீகரித்த ஒருவனைக் காட்டிலும் ஸதாசார்யன் மூலம் திருத்திப் பணி கொள்ளப்பட்ட ஒருவனையே விசேஷமாக அபிமானித்து உகந்திருக்கும்

ஆசார்ய நிஷ்டை பெறும் சரம ப்ரபந்நனுக்கே விலக்ஷணமான ஞான அநுஷ்டானச் செல்வங்கள் உண்டாக வேண்டும் ஸ்ரீவைஷ்ணவாதிகாரிக்கு அவசியமான அபேக்ஷிதங்கள் எல்லாம் அவனுக்கு நிறைந்திருக்க வேண்டும்

## 21. ஆழ்வார் அருளிச்செயல்களை ஓதத் தகுதி பெற்றோர்

ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஓதுவதற்குத் தகுதி பெற்றவர்கள் "ஜீவன் முக்தர்கள்" என்று அழைக்கப் பெறுவார்கள் அவர்களை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். உலகியற் பற்றுக்களை முற்றும் துறந்தவர்கள், எவ்வளவு சோதனைகள் எதிரிட்டாலும் மேலையார் சென்ற நெறிகளைத் துறக்காதவர்கள்; இழவு பேறுகளில் துன்ப இன்பங்களைச் சிறிதும் அடையாதவர்கள்; எம்பெருமானே உபாயமென்று துணிந்தவர்கள், ஆசார்ய அபிமானமே உத்தாரகம் என்ற உறுதி பூண்டவர்கள், இத்தகையோர்கள் எவ்விடத்தராயினும் எவ்வியல்வினராயினும் எக்குலத்தினராயினும் 'ஜீவன் முக்தர்கள்' என்று போற்றத்தக்கவர்கள். இவர்களே அருளிச் செயலைக் கற்பதற்கும் அநுபவிப்பதற்கும் முழுத் தகுதி பெற்றவர்கள்.

## 22. சொல்லாற்றலா? பொருளாற்றலா?

ஜீவன் முக்தர்களாய அருளிச்செயலை அநுபவிக்கும் யோக்யதை பெற்ற ப்ரபந்நர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள்

அருளிச்செயல்களை ஓதுவதோடு நிற்காது பொருளை அறிந்து அறிந்தபடி ஒழுகவேண்டும் கடப்பாடு உடைய வாகள். இவாகளுக்கு அர்த்த அநுஸந்தானத்தோடு சப்த அநுஸநதானம் நிகழவேண்டுமெ. சொலலாறறலைக் காட்டிலும பொருளாற்றலையே இவாகள் தஞ்சமாகக் கொணடிருப்பார்கள மநத்ர ரத்நமாகிய தவயததைக் குறித்து, "தவயம ஆாத்தாநுஸநதாநேநஸஹ" எனறு எமபெருமானா கத்யத்திஃ அருளிச் செய்துள்ளாா. த்வயத்தின் விளககமான திருவாய்மொழியைக குறிதது ஸ்வாமி நமமாழவாரும், "இப்பத்துடன வைகல பாட வல்லாா வானோர்க்கு ஆராவமுதே" எனறு அருளிச் செயதுள்ளார் இதறகு, "அர்தததோடே உடனபடடுப பாட வலலவர்கள" எனறு பனனீராயிரபபடி உரைகாரர் பொருள வரைநதுளளாா (உடன—பாடவலலாா) என்று இணைத்து 'ஸாபிப்ராயமாகப் பாட வலலாா' என்று பெரியவாசசானபிள்ளையும நமபிள்ளையும வ்யாகயானிததிருக்கினறனர்.

உபாஸகர்களே சப்த சக்தியால் (சொல ஆறறலால்) பலனை எய்த முயலவாாகள. அவர்கள திருமநத்ரத்தைக்கூட ஜபஹோமாதிகளில பயனபடுத்துவார்கள். ப்ரபந்நர்கள் பொருளாற்றலைக் கருதி அதனையே சிந்தித்துப் பயனெயதுவார்கள. அவர்களே முக்தியோக்யர்கள், முகதபராயாகள, நித்யசூரிகளைப் போனறவாகள்.

வெறும சொற்களையே மனப்பாடஞ் செய்து அர்தத்தைப புநதியால சிந்தியாது பொழுது போககி அநுஷ்டானத்திற்குக் கொண்டுவராதவாகள் மநதரார்தத காலக்ஷேபம நிதயம சதாபிஷேகம பணணிஞலும் அவர்கள கடைததேற மாட்டார்கள எனறு பட்டா அருளிச்செயவராம்.

திவய ப்ரபநதஙகளையும் பொருளை அறியாது கேவலம மனப்பாடமே மாத்திரமாஞல், 'நமககு நாலாயிரம

வரும், மூவாயிரம் வரும' எனறு அஹஙகாரத்துககுக் காரணமாகிவிடும. எது வரககூடாதோ அது வநதுவிடும்.

## 23. ஆக்ஷேபம்

"கூறுதல் வலலார் உளரேல கூடுவர் வைகுந்தமே" எனறு ஆழவாா தாமே அருளிச்செய்திருக்கிருரே! 'திருவாய்மொழியை வெறும் சொல்லளவில கூறுவாாகள் வைகுந்த மாநகரை அடைவார்கள்' எனறு தானே இதற்குப பொருள. அபபடியாஞல் பொருளேயும கறக வேணடுமென்று நிாபநதிப்பது பொருந்துமா?

## 24. ஸமாதானம்

இபபத்துப பாடலகளேயும சொலலளவிலேயே கூறி நிறபவர்கள முகதி அடைவாாகள என்ருல, அப்படிச் சொலலிவிடடு அடியாா பெருமக்களே நிநதிபபது முதலான அபசாரஙகளேயும் இழைத்தால அவர்கள் முக்தி அடைவார்களா? ஒரு நாளும் அவர்கள முக்தர்களாக ஆகமாட்டாாகள். ப்ரதிகூலமான விரோதிகள இலலாத பக்ஷத்தில வெறும் பாடல்களேச் சொல்லிய அளவிலேயே அவாகள முகதி யடைவார்கள் என்றது அத்திருவாய் மொழியின் ப்ரபாவத்தை வலியுறுத்துவதற்காக உயர்வு நவிற்சியாகச் சொனனது என்றே கொள்ளவேணடும.

எனவே ""கூறுதல் வலலார்'' எனற தொடருக்குக "கூறுதலும் கூறியபடி நிறகவலலார்களும' எனபது வரை பொருளாகக் கொள்ளவேண்டும்.

## 25. மீண்டும் ஒரு ஆக்ஷேபம்

பாசுரத்தில கூருததொடர்களே ஏன வருவிததுரைக்க வேணடும்? சொறகள் கிடநதபடியே பொருள் கொணடால யாது குற்றம்?

## 26. ஸமாதானம்

ஆழ்வார் தாமே ஒரு திருவாய்மொழியில ""காமா மானேய நோககியர்ககே'' என்றும், மற்ருெரு திருவாய

மொழியில ""மதனா மின்னிடையவர்க்கே'' என்றும அருளிசசெய்து வைத்திருக்கிறார். சொற்கள் இருந்த படியே கொண்டு பொருள காணில, ''மானேய் நோக்கி யர்க்கு (பெண்களுக்கு) இப்பததுப பாடலும வலலவர்கள விரும்பத்தககவராக ஆவார்கள்'' எனறும், ''மினனிடை மடவார்கடு அவர்கள் மனமதனைப் போனறிருப்பார் கள'' எனறும் பொருள சொல்லியாகவேணடும். பரம விரகதரான ஆழவாா இப்பயனை ஒருநாளும கருததில கொண்டிருககமாடடார். ''சேலேய கணணியரும பெருஞ செல்வமும மேலாத் தாய தந்தையும அவரே இனி யாவாரே!'' எனற ஆழவார் அபிப்ராயத்திற்கு முரண படாது பொருள குறிக்கவேண்டும். ஆகையாலதான், "காமுகர் காமினிகளுககு போக்யராமாப் போலே இப் பத்துப் பாடலகளையும அப்யசிக்க வலலவர்கள் நித்ய ஸூரிகளுக்கு போக்யராவார்கள்' எனறு பொருள் கூறப்படுகிறது.

ஆகையால் ""கூறுதல வல்லார் உளரேல் கூடுவர் வைகுந்தமே'' என்ற இடஙகளை ப்ரசமஸாபரஙகள், அதாவது பெருமையை உயர்த்திக கூறுவதில நோக்கான உயாவு நவிறசி வாக்யங்கள் என்று கொளவதில தோஷ மிலலை; அப்படியே கொள்ளவேண்டும்.

## 27. ஆஸ்திக நாஸ்திகர்கள்

ஆழ்வார் அருளிச்செயலிலும் ஸம்ப்ரதாய நூலகளி லும அாதத ஞானத்தை (பொருளறிவை) ஸமபாதிக் காது பிறவிச் சுழலிலே ஆழநது அனர்த்தப்பட்டுப் போகிறார்கள **ஸம்ஸாரிகள்**. அவர்களை அறிவிலிகள் எனறு கூறலாம்.

சிலர் அருளிச்செயலகளின பொருளை அறிநதிருநதும் உலகச் சிறறினப விஷயஙகளில மனம் செலுத்தியும், அஹஙகார மமகாரஙகளான செருககுகளை வளர்த்துக் கொணடும், அதனால பாகவதாபசாரங்களைச் செய்து

கொண்டும, சாஸ்த்ரஙகளைக் கற்றதனுல தர்க்க வாதங்களால பிறரைத் தோலவியுறச் செயது மகிழந்துகொண்டும், பொருளுக்கும புகழுக்கும தகுதியிலலாத அறப மனிசர்களைத தோத்திரம் செயதுகொண்டும் உடலை வளர்ப்பதிலேயே நோககாசத் திரியும ஆஸ்திக நாஸதிகராயிருககிருர்கள.

அறிவிலியைத் திருத்தலாம; ஆஸ்திக நாஸ்திகனை ஒருநாளும் திருததமுடியாது. அவர்களோடே பழகுவதை அறவே விடவேணடும. பழகினுல அவாகளுடைய தீய பழககஙகள ஒட்டிக்கொண்டு துயர்ககடலாகிய பிறவிப் பெருங்கடலில ஆழத்திவிடும. ஆதலால மஹாத்மாககளான ஸ்ரீவைஷ்ணவர்களோடுதான் எப்போதும் உறவாடிப் பழகி வாழவேணடும.

## 28. மஹாத்மாக்கள் யார்?

பகை-நட்பு, மானம-அவமானம,குளிர்ச்சி-வெப்பம, சுகம-துக்கம், லாபம்-நஷ்டம், புகழச்சி-இகழ்ச்சி ஆகியவற்றில விருப்பு வெறுப்புகக ளில்லாது சமநிலை யுடையவர்களாய், குரோதததை அறவே ஒழித்தவர்களாய், எலலா உயிரிடத்தும நலலெண்ணம கொணடவர்களாய, பரம ஸாதுக்களாய, இறைவனிடத்துப் பேரன்பு பூண்டவர்களாய், எல்லாம் அவனே எனறிருப்பவாகளான பெரியோாகளே '**மஹாத்மாக்கள்**' என்று சொல்லப்படுவார்கள. இவர்களுடைய பழககமே வீடு பேறறுக்கு வாசறபடியாகும் இவரையே ''நனனெறி சேர் ஆததிகா'' எனறு மணவாள மாமுனிகள் குறிப்பிடுகிருர்.

## 29. ஆஸ்திக நாஸ்திகர்கள் இயல்பு

மஹாத்மாக்களான பெரியோர்களுக்கு நேர் எதிரிடையான ஆத்திக நாத்திகரை இனங் கண்டு அவர்களை நெருங்காது விலகவேணடும். அவாகள் எப்படி இருப்பார்கள் என்ருல்;

(1) பூர்வாசார்யர்கள அருளிச்செய்த க்ரமங்களைக் கேட்டு அவவர்த்தங்களுககு முரண்படாதபடி நன்ருக ஆராய்நது பொருததமாகச் சொலலாது, தமமுடை நெஞசில் தோனறின அாத்தஙகளையே சொலலி அவையே சுதத ஸமப்ரதாய வார்ததை எனறு தர்கக வாதங் களாலே ஸ்தாபிப்பார்கள்;

(ii) விரோதங்களான தேஹ அபிமானங்களை (உடற் பறறுககள) கைவிடமாடடாது, நமக்கு ஸதாசார்யரின் கடாக்ஷம் இருப்பதால அஞச வேண்டியதிலலே; அதனல் இழிந்த செயல்களைச் சொனனுலும் செய்தாலும் குற்ற மிலலே என்று விபரீதமான அர்த்த அநுஷ்டானங்களைப் போதனை செய்வார்கள்;

(iii) ப்ராம்மண ஜனமத்தை அடைந்து பாகவதர் களில தலைமை தோனறுபடியான நாமங்களையும் (பெயர் களையும்), உருவங்களையும (அலங்காரங்களையும்)மட்டுமே தரித்துக் கொண்டிருப்பார்களு;

(iv) மனவடக்கம, புலனடக்கம், அமைதிகள் ஆகிய மஹா பாகவத லக்ஷணஙகள ஒனறுமில்லாது நன்ருகக் காலேயும கையையும கழுவி, பரிவட்டங்களைப் பாங்காக அலம்பித திருவரையில பொருத்தமாகச் சாத்திக் கொணடு, பனனிரண்டு திருமண்காபபுகளையும் இட்டுக் கொணடு, திருமார்பில திருமணித் தாழவடங்களையும் திருபபவிததிர மாலேகளையும அணிநதுகொண்டு, திரு விரலில பவிததிரம தரித்துக்கொணடு, ஓதியும் ஓதுவித் தும ஸகல ஜனஙகளையும வசீகரிககும்படியான வேஷத் தைப புனைநதுகொணடு வேஷதாரிகளாய, விருபபு வெறுபபுககள நிறைநதவராய, பொருளைச் சமபாதிப் பதையே குறிககோளாகக கொணடு, பாகவதாபசாரங் களை நாடோறும செய்து போருவாாகளாய் அனர்ததப் பட்டுக கொண்டிருப்பாாகள.

## 30. ஆஸ்திக நாஸ்திகர்களோடு எப்படிப் பழக வேண்டும்?

அவர்கள் நாமமானிகளாய இருந்தாலும் ஸ்ரீவைஷ்ணவ வேஷத்தைத தரித்துககொணடிருப்பதால அவாகளை அவமதிகள் பண்ணககூடாது; ஆனால அவர்களைச் சென்று அணுகக கூசவேண்டும. அதாவது அவாகள விரும்பும் த்ரவ்யஙகளைக கொடுத்துவிட்டு அவர்களோடு உள் கலந்து பரிமாறாது விலகி யிருககவேணடும.

## 31. பூர்வாசார்யரில் பலர் மனைவி மக்களோடு வாழ்ந்தது பொருந்துமா?

ஆஸதிக நாஸதிகாகள என்று குறிப்பிடபபட்டவர்கள் மனைவி மக்களோடு கூடி இல்லற இனபம நுகர்நதவர்களாகக் காணபபடுகின்றனர். ஆழவார்கள ஆசாரயர்களில ஓரிருவரைத் தவிர அனேகா ஸமஸாரத்தில மனைவி மக்களோடு கூடியே செயலாற்றி வாழநதனர் அவாகள முக்திரோயாகயரா? அவாகளை ஜீவன முக்தாகள என்றும மஹாதமாககள் என்றும கருதலாமா? இவ்வின எழுவது இயலபு.

ஸ்ரீமந நாதமுனிகள் தொடஙகி அஸமதாசார்யர் ஈறுக எலலாரும ஸநயஸதாகளே ஆவார்கள். அவர்கள எக்காலத்தும ஸநநியாஸிகளாகவே மதிககத்தககவாகள்.

பூர்வாசார்யர்களான நமமுடைய பெரியோர்கள் மஹாதமாக்களாய உஞசவருத்தியால தேஹபோஷணம செய்த வைராகய நிதிகளாவாாகள். அவர்களில சிலர் ஆசார்யா உகப்பின பொருட்டும உலகின்பாற் கொணட இரககததாலும் மகப்பேறு அடையுமவரை மனைவியோடு போகயதை தர்மபுத்திகளை விட்டு ஆசார்ய ஆஜ்ஞையை மீறவொண்ணாது என்ற ஒரே கருததுடன கூடியிருநது நாலுநாள அப்படி வாழநது பிறகு விஷய சுகத்தைத் த்யாகம் செய்வார்கள, சிலர் துறவு நெறியைத் தழுவு

வார்கள்; சிலர் ஆழ்வானும் ஆண்டாளும போன்று ஒரு வர்க்கொருவர் விரகதியோடு கூடி பகவத் குணங்களை அநுபவித்தும் பகவத் பாகவத விஷயத்தில் அடிமைகளைச் செய்தும் வாழ்நதுகொண்டிருப்பார்கள்.

அத்தகையோாகளைக கணடதே காட்சி கொணடதே கோலம் எனறு மனம போனபடி பெண்டிரோடு கூடி வாழநது தகுதியற்ருேர்களுக்கு அடிமை செய்து அவர்கள விடடெறிநத பொருளைக கொணடு வயிறறைறக கழுவும் அயோக்யர்களோடு சமமாக வைத்து எண்ணததகுமோ? அபபடி எணணுவது மாபெரும் பாவமன்ருே!

ஆதலால பூர்வாசாாயர்களில சிலர் மனைவி மக்க ளோடு கூடி வாழந்ததைக காரணங் காட்டி விஷய சுகததை விரும்புவதை நியாயப்படுததக்கூடாது.

## 32. ஆக்ஷேபம்

மனைவி, மக்கள், மனை, செல்வம் இவற்றை நமது எனறு எண்ணி அநுபவித்தால அது விரோதமே; அவறறை பகவத் ஸமபந்தமானவை எனறு கொண்டு விஷய சுகங்களில ஈடுபட்டால என்ன தவறு?

## 33. ஸமாதானம்

எல்லா வஸ்துக்களையும 'ததீயம்' (இறைவனோடு தொடாபுள்ளவை) எனற புத்தியோடு பார்க்கவேணடியதுதான. ஒரு வஸதுவும் தனககும பிறருக்கும் சேஷமாயிருப்பதிலலை. எமபெருமானுகிய அவனுக்கே சேஷம் (சொந்தம) எனபதை உணர்த்துவதற்காகவே அப்படிப் பாாககச சொலலியுளளது. இவவளவு தவிர, விரோதிகளுககு எல்லை நிலமான தன் சரீரத்தையும் அதன் தொடர்பான மனைவி மககளையும் எபபோதும கூடி வாழநது விஷய சுகததில் ஈடுபட வேண்டுமெனறு ஒரு சாஸதரத்திலேயும் சொல்லவிலலை. எலலாம் அவனது எனற பரதிபத்தி (நம்பிககை) மாத்திரம் வேண்டும.

எலலாம் அவனது. அவறறை எலலாம அநுபவிசக வேணடுமெனறுல், 'நரகும் சுவாக்கமுமாய' எனகிறபடி நரகத்தையும் விஷய சுகமாகக் கொண்டு அநுபவிகக நேருமே! அப்படி நரகததையும அநுபவிக்க முனவருவார் களா?

## 34. விரும்பத்தக்க உறவினர் யார்?

எம்பெருமானிடத்திலும அவனுடைய அடியார் களிடததிலும் அனபுடையவர்களாய, அறிவு ஒழுக்கங் களில மிகவும் சிறப்புடையவர்களாய், நல்லது தீயது விவேகித்து அறியும அறிவாளிகளாய், விரக்தியும சாந்தி யும் உடையவர்களாயத் திகழும் தேஹஸம்பந்திகளே உறறாகளாவும் சுற்றத்தினர்களாகவும மதிக்கத் தக்கவர் கள். ஆழ்வானுக்கு மனேவியாக ஆணடாள வாய்த்தது போலவும, மகனுக பட்டர் வாய்த்ததுபோலவும் அமைந் தால அது கொணடாடத தக்கதன்றே! ஜஞானி களுடைய தேஹஸமபந்தம் உததேசயமாகும. ஸந்யஸ் தரான ஆளவந்தார் பிதாமஹரான நாதமுனிகளின் ஸம்பநதத்தையே பறறுசாகக கொண்டு எம்பெருமானேச் சரண் புகுந்தார். 'ஸ்ரீவத்ஸாஙக ஸுத.' என்று ஆழவான சமபநதத்தை படடர் மதிததும் போற்றினர். மாமான் மகளே எனறு திருவாயபபாடியில ஒரு ப்ராக்ருத ஸம்பந்தத்தை ஆண்டாள் விரும்பினுள.

ஆதலால அநுகூலரான தேஹ ஸமபநதிகளே (உறவு முறையாரை)த துறகக வேணடியதிலலே, ஆனுல பகவத் விஷய அநுபவததுககு விரோதிகளாயப் பிரதிகூலர் களான உறவினாகளே அறவே துறககவேணடும்.

## 35. ஆக்ஷேபம்: புத்தி த்யாகமா? வஸ்து த்யாகமா?

ப்ரதிகூலர்களே அறவே துறக்கவேண்டுமா? அவர்கள் துறக்கத் தக்கவர்கள எனறு கருத்தளவில் அமைநதால் போதாதா? அதாவது அவர்களோடு பழகிககொண்டே

யிருந்தாலும் அவர்கள உறவு முறையை மட்டிலும மனத தால துறததலாகிய புத்தித்யாகம போதும. நமமாழ்வா ரும் 'வீடுமின முறறவும்' எனற திருவாயமொழியில 'விட வேணடும' எனறு உபதேசத்தை ஆரம்பிதது, விட வேணடிய முறையைச் சொலலுமிடத்தில 'நீர நுமது எனறு வேர்முதல மாயதது' எனகிறபடி 'என்து' எனற அகப் பற்றினையே விடத்தக்கதாய அருளிச்செய்துள்ளார். இது புத்தி த்யாகத்தையே குறிக்கிறது அன்றே! 'எனது' என்ற அபிஸந்தி குலைநது எலலாம் அவனது எனற ப்ரதிபத்தி மாத்திரமேபோதும். எலலாவற்றையும் வாசனை யோடு வஸ்துதயாகமாக அறவேவிட்டுக் கானகம் புகுநத ஆதிபரதன், சௌபரி முதலிய ருஷிகளுக்கும் ஸமஸாரம மீணடும அவர்களைச் சுற்றிகொணடு துயர்அளித்ததைக் காண்கிறோம. எனவே, புத்தி த்யாகமே போதும், ப்ரதி கூலர்களான உறவினர்களின் தொடர்பை அறவே அறுத்து ஒதுக்கவேண்டியதில்லை.

## 36. ஸமாதானம்

புத்தி தயாகம முதற்கண் வேண்டியதேயாகும். வஸ்து த்யாகம ஸதிரமாக வேண்டுமானால முதலில புத்தியில அநத வஸதுவினுடைய ஸஙகம்(காதல)ஒழிககபபெறுதல வேணடும மனம ஒன்றுமல உடலளவிலுளள சேர்க் கையை ஒழிததால மீணடும ஒருக்கால அநத ஸம்பந ததைத மனம நாடககூடிய அபாயம உளளது காயிக மாக (உடலளவாக) எலலாம விட்டுபபோன சௌபரி முதலிய ருஷிகளுககும மனஸ் ஸஙகமுணடாகி (மனப் பற்று) பநதபாசம் தொடாநது விட்டது. எனவே முதற கண இன்றியமையாது வேண்டப்படுவது புத்தி தயாக மான மனத்துறவு எனபதறகாகவே ஆழவார 'நீர் நுமது எனறு வேர முதல மாயதது' எனறு வலியுறுததினார். ஆதலால, அஹஙகார மமகாரஙகளின குரூரத தனமை யினை அறிநதுகொள்ளாதுத்யாஜயம(விடத்தககது)எனறு

அறிகையே போரும் எனறு அவ்வளவில நிற்பது ஆழ வாரின் திருவுள்ளத்திறகுச் சேராது. தயாஜயம எனறு அறிந்த அககணமே முறறிலும த்யஜிததறவேணடும் (விடவேண்டும).

## 37. ஆக்ஷேபம்

ஆனுல் இக்காலத்திலும பகவத் விஷயத்தை நனருக அறிநத சிலர் விஷயங்களில (உலகியற் பொருட்கள்) ஈடு பட்டுப் பொருள் தேடுவதில மூழ்நது ஸமஸாரத்தில பொருந்தி வாழகின்ருர்களே; அறிவாளிகளான அவர்கள் பொருந்தாத அதனைத் துறக்காது ஒழிவது ஏன்?

## 38. ஸமாதானம்

அதற்குக காரணம பகவானுடைய மாயைதான. "துயக்கறு மதியில நனஞானததுள அமரரைத் துயக்கும, மயக்குடை மாயைகள வானிலும் பெரியனவலலன' எனறும, 'உன மாயஙகள் மேலைவானவரும அறியாா என றும மாயையின் ஆறறலை ஆழவார் அருளியது காணக. நிதயசூரிகளேயும மோஹிககப பணணும் பகவானுடைய மாயையினசெயலேயொழிய மேறசொலலிய ஞானிகளின தோஷமனறு. ஆனுல இவாகளை அதைககாட்டி அவ மானமசெய்தால் செய்கினறவனுக்கு அது குறறமாய் முடியும. எனவே மேற்குறிததவாகளின அநுஷடானத் தைப் பினபறறுதலும அவர்களை அவமானப்படுதத லும இரணடுமே தவிர்ககபபடவேண்டும.

## 39. பாகவதர்களும் பகவன் மாயையும்

பாகவத உததமர்களையும் மாயை மயககும் ஆறறல படைத்ததோ? என்னில;

தொண்டரடிப் பொடியாழவார் பரம விரக்தியோடு ப்ரம்மசாரியாயிருந்தும், பகவத கைங்கரிர்யத்தில ஊற்ற முடையவராயிருந்தும் தேவதேவி எனற வேசியைக் கணடு மோஹிதது அவளைப பினதொடர்நது பகவத்

கைங்கர்யத்தையும் இழந்து விஷய சுகத்தில ஆழ்ந்து ஸகல துக்கங்களையும் அநுபவித்தாரன்றே! பெரியதிருவடி ஸுமுகன் நிமித்தமாக எம்பெருமானேடே எதிரிட்டா னன்றே! மாயையின ப்ரபாவம அத்தகையது என்று உணர்க

## 40. ஈசுவராபிமானமும் ஸதாசார்யாபிமானமும்

ஸதாசார்யனுடைய அபிமானத்திலே ஒதுங்கி நிழலைப்போல பிரியாது வாழப்பெற்றல், எம்பெருமான் தனனுடைய லீலைக்கு விஷயமாகாதபடி ஸதாசார்யன காத்தருள்வான. அதற்காகவே ஸதாசார்யாபி மானததை வேண்டுகிறது. ஸர்வேச்வரன் தன்னுடைய அபிமானத்தில் ஒதுங்கிஞரையும் தனனுடைய லீலைக்கு ஆட படுத்துவானே? எனனில்; எம்பெருமானைத் தவிர்த்த விஷயங்களில பற்றற்று அஹங்காரம் சிறிது மின்றி ஆர்த்தி பெருகியவர்களை யொழிய மற்றவர்களை அவன தன்னுடைய லீலையாகிய மாயைக்கு வசப்படுத்துகிறன்

நாம வைகுந்த வாசலைக் காத்துப் பரிபாலனம பணணுகிறேம் என்கிற அஹஙகாரம் தலை எடுத்ததால் தான துவாரபாலகர்களாகிய ஜய விஜயர்களை ஒரு முனி சாபத்தை வ்யாஜமாகக கொண்டு அவர்களை அரககர் களாகப் பிறக்குமபடி தளளிவிட்ட சரித்திரத்தை அறிக.

இந்தரத்துய்ம்னன என்ற அரசன ஸாவேசுவரனையே த்யானம பணணிககொணடிருந்தான். தனனைப் போனற பக்தி நிஷடர் ஒருவரும இலலை என்ற அஹங்காரம் ஏற்பட்டது. அதனல அகஸதியரின் சாபம் எனற காரணத்தைக் கொணடு அவனை ஒரு யானையாகப் பிறக்கச் செயதான எமபெருமான. சில காலம கழித்த பிறகு அவனை ஒரு முதலை கவ்விப் பிடிததிழுததபோது அவன "நாராயணு! ஓ மணிவணணு! என ஆரிடரைத் தீராய!'' எனறு அலறியதும எம்பெருமான ஓடிவநது ரக்ஷிததான்.

ஆகையால் அஹங்காரம், விஷய ப்ராவண்யம், பாகவதாபசாரம முதலியவற்றில் சமபந்தம உண்டா ஞல், ஜ்ஞான பக்திகள் இருந்தாலும் அவை வறிதே போய எம்பெருமானுடைய லீலைக்கு ஆளாவார்கள். அவர்களில பக்தி மிகுந்துள்ளவர்களைச் சிலகாலம் அப்படி லீலைக்கு விஷயமாக்கிப் பிறகு இரக்கத்திற்கு விஷயமாக்கி அருள் செய்து ரக்ஷிக்கிருன். எனவே, நாம ஞான பக்தி களால இறைவனுடைய அபிமானத்தை ஸம்பாதித்து விட்டோம; நமக்கு ஒரு பயமுமில்லை என்று இருமாப் படைந்து அஹங்கார விஷயப்ராவண்ய பாகவத அபசாரங்களில இழிதல தகாது. அப்படி இழிந்தால் விபரீதமான ஞானத்தைப் பிறப்பித்து சாஸ்த்ரார்த்தங் களுக்கு விபரீதமான அர்த்தங்களைத தோற்றுவித்துத தன்னை விட்டு அகன்று போகும்படி எம்பெருமான் செய்கிருன.

## 41. எம்பெருமான் ஒருவனைப் புறம் போக்கக் காரணங்கள்

எம்பெருமான ஒருவனைப புறமே போக்கி ஒதுக்கு வதற்கு மூன்று ஏதுக்கள் சொல்லப்படுகின்றன. அவை தேவதாந்தரம, ஸாதனந்தரம, விஷயாந்தரம் என்ற மூன்று ஏதுக்களும அவன வைத்த மாயங்களாகும.

'மற்ருே தெய்வம் பேணப் புறத்திட்டு' என்றும்; 'நெறி காட்டி நீக்குதியோ?' என்றும, 'பல நீ காட்டிப் படுப்பாயோ?' என்றும ஆழ்வார்தாமே இவற்றை அருளிச் செய்திருக்கிருர. பிற தெய்வங்களைத தொழுவது, பிற நெறிகளைப் பற்றுவது, பிறவற்றில ஆசை வைப்பது என்ற இம்மூன்றிலும் விஷயாந்தரம என்பது மிகவும கொடியதாயிருக்கும. தேவதாந்தர ஸ்பர்சம புறத்தே தள்ளிவிடும; அதாவது உபாயாந்தரத்தில ஒதுக்கிவிடும; விஷயாந்தர ஸ்பர்சம ஆத்ம நாசத்தையே உண்டாக்கி விடும. அதனல் தான அவற்றை (விஷயாந்தரங்களை)

'வீடுமின முற்றவும்' என்று ஆழவார் உபதேசித்தார். பிற விஷயங்களிலுள்ள ஸுகத்தைப் பெரிதாக மதித்துப் பற்றும புத்தியை வாசனையோடு விட்டு, "இறை உள்ளில் ஒடுங்கே' என்கிறுர் ஆழ்வார்.

ஆழ்வாரைப் பின்பற்றியே ஆசார்யர்களும் இதர விஷயங்களை வாசனையோடே விட்டே எம்பெருமானைப் பற்ற வேணடுமென்று வற்புறுத்துகிறுர்கள். ""ஸர்வ தர் மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வ காமாம்ஶ்ச ஸாக்ஷராந் லோக விக்ராந்த சரணௌ ஶரணம் தே வ்ரஜம் விபோ''।। எனறு அருளிச்செய்வர் எம்பெருமானுர். இதில் சொன்ன அர்த்தத்தை அநுஷ்டியாது கேவலம் நைச்யாநுஸந்தானம் (தற்சிறுமை பாராட்டல்) இகழத்தக்கதாகிறது.

## 42. ஆக்ஷேபம்

விஷயாந்தரங்களின வாசனைகளை அறவே விட்டு அவற்றை அற ஒதுக்கியே பகவானைப் பற்றுதல் வேண்டுமென்ருல் உண்மையில் அச்செயல் அரிதேயாகும். ஆனுல் "எழுதும் என்னும் இது மிகை' என்றும், 'எண்ணிலும் வரும்' என்றும் வருகிற ஆழ்வார் பாசுரங்களைக்கண்டால் எம்பெருமான் எய்துவதற்கு மிகவும் எளியவன் எனறு தோன்றுகிறதே!

## 43. ஸமாதானம்

ஸர்வ சரணயனுன (எல்லார்க்கும் புகலாகப் பற்றத தக்கவன) எம்பெருமானுடைய ப்ரபாவத்தையே அவ வார்த்தைகள காட்டுகின்றன. ""பொய்யே கைம்மை சொலலிப் புறமே புறமேயாடி மெயயே பெறறெழிந் தேன்'' எனகிறுர் ஆழவார். கழுததுக்கு மேல நல வாாத்தை சொனனுலும அது மெய்யாகும்படி தலைக் கட்ட வல்ல ஸர்வசகதியானவன் கருணையாலே தேவையான தகுதிகள எலலாம் தன்னடையே சித்திக்கும் எனறு அப்படிச சுலபமாகச் சொலலிற்று எனறு கொள்ள வேணடும்.

இபபடிக் கொளளாதே அதுவே பொருள் எனருல், கர்ம ஜ்ஞாநாதிகள வேணடாம, பக்தி பரபத்திகளும் வேண்டாம, ஆசார்யாபிமானமும வேணடாம, வைஷ ணவத்வமும வேணடாம், தேவதாநதர நிவருத்தியும வேணடாம, சாஸத்ர வரம்புகளும் வேணடாம, இஷட மானபடி வாழநது ஓா அஞசலி பண்ணிஞல பலன உண் டாகும் எனருகிவிடும்; மோக்ஷ சாஸ்த்ரங்களும் ஆழவாா ஆசார்யர்களின் வசனங்களும் தேவையறறவையாயும் வீணுகியும விடும்.

## 44. ஆக்ஷேபம்

வேதம் சொன்ஞல் அர்த்தவாதம் எனறு கூறலாம்; ருஷிகள சொன்ஞல இருள துயககு மயககுகளாகிற தோஷங்களேக காட்டலாம, எமபெருமான சொனஞல தாமஸ ஜனஙகளே மோஹிககச்சொன்ன களளப பொயந நூலகள எனறு நிரூபிககலாம், ஆஞல மயாவற மதிநலம் அருளப்பெறற மஹா ஜ்ஞானிகளான ஆழவாாகளின வாககுகள பொய்யில பாடலகளாகிக குறறமறறன வாகும. ஆழவாா, 'தொழுதெழு என மனனே, எனறும, "பத்துடை அடியவர்ககுஎளியவன' எனறும' 'புரிவதுவும புகை பூவே' எனறும, "கண்ணுளளே நிறகும் காதனமை யால தொழில எண்ணிலும வரும, எனறும், "கணடாயே நெஞசே! கருமங்கள் வாயககினறு, ஓர் எணதானு மினறியே வநதியலுமாறு' எனறும, 'சிற்றவேணடா சிநதிப்பே அமையும' என்றும், "சரணமாகும் தனதாள் அடைநதார்க் கெல்லாம மரணமாஞல் வைகுநதம கொடுககும் பிரான' எனறும் அருளிய வார்த்தைகள் பொய்யோ?

மேறகூறிய வார்த்தைகளால கைகூப்புதலே போதும் உயவுக்கு ஏதுவாகும; பகதி சிறிது உணடாஞலும் எளியஞய் வருவான்; இன்முகத்துககு அடையாளமாக ஏதேனும் ஒரு புகை, ஒரு புஷ்பததை சமாபபித்தால்

அதுவே போதும்; சிறிது காதலையும பரமபக்தியைப் போனறு மதிதது முகங் காட்டுவான; நாம அபேக்ஷிக் காமலேயே அருள் செயவான, பரபரகக ஒரு செயலும் செயயவேண்டாம, சிந்திப்பதே போதும், என்று பக வானை அடைதல மிகவும் சுலபம் என்று விளக்கி இறுதியில தன் திருவடிகளைப் பற்றினுர்க் கெல்லாம் சரீர முடிவில பரமபதம் கொடுக்கும என்று ஆழ்வார் உபதேசித்தவை வெறறுரைகளா?

## 45. ஸமாதானம்

இதற்கு ஸமாதானம மதுரகவியாழ்வார அருளிச் செயதிருககிருர். "அனனையாய அத்தனுய் எனனை ஆண்டிடும தனமையான" என்று சுருங்கக கூறுவர் மதுர கவிகள.

"அனனையாய்" என்றது, ஆழவார அனனையைப போனறு வாத்ஸல்யத்தால நான் எனனுடைய பாபத் தைப் பார்த்து அஞசாதபடி எம்பெருமானுடைய எளிமைகளைப் பரகக உபதேசிப்பதன மூலம் சரணய னுடைய ப்ரபாவத்தைக் கூறி ஸர்வேசுவரனிடததில எனககு ப்ரியத்தை ஊட்டினுர் என்பதைக காட்டுகிறது.

மேல எடுத்த வசனங்கள் எல்லாம் அவ்விதமே அமைந்தவை. "அத்தனுய்" எனறது ஹிதத்தைச் சொலலி சிக்ஷிககும தந்தையைப போன்று ஆழ்வாரும் எனக்கு அஹங்கார மமகார விஷய ஸுக நிவ்ருத்திகளை "வேர் முதல மாயதது" எனறு தொடங்கி இறையருளைப் பெற எலலாத் தகுதிகளையும் உபதேசித்து அவ் விறையருளைப் பெறத துடிக்கும் பரம ஆர்த்திவரை உணடாககி அருளி னுர் எனபதாகும்.

ஆதலால் ப்ரபாவபரமான வார்த்தைகளை மட்டுமே பாாத்து அஹங்கார மமகாரங்களையும் ப்ரதிகூலமான தார புததிராதி விஷய ஸுகங்களையும் அறவே ஒழிக்காது போனுல நாசமே பலிககும் என்று அறியவேண்டும்.

## 46. ஆக்ஷேபமும் ஸமாதானமும்

ஆர்த்தியாவது உலகப் பற்றுக்களிலிருந்து விடுவித்து என்னைக் கடாக்ஷிப்பது எந்நாளோ? கூவிக்கொள்ளும் காலம் என்றுகொலோ? என்று ப்ரார்த்தித்துத் துடிப்ப தாகும். அப்படி ப்ரார்த்திப்பது இறைவனை வறபுறுத்துவ தாகாதா? அது அசித்தைப் போன்று பரதந்த்ரமா யிருக் கக் கடவனென்று கூறும் நம: பதத்தின பொருளுக்கு விரோதமாகாதா? இதனுல் தன்னுடைய ரக்ஷணத்துக் குத் தான முயற்சி செய்வது என்ற குற்றமன்றோ உண்டா கும்? இவ்வாறு விஞக்கள எழுகின்றன.

நம' என்ற பதத்தில் ஒரு பிரார்த்தனை உள்ளடங்கி இருக்கிறது. பகவத் ப்ராப்திக்கு விரோதிகளைப போக்கி யருள்க எனபதே அதுவாகும் "நாராயணுய' என்பதில் "ஆய' என்ற வெளிப்படையான வேற்றுமை யுருபால் கைங்கர்ய பரார்த்தனை செயயப்படுகிறது. இது ஸவரூபத் துக்குச் சோந்ததாயுள்ளது. அதைப் போனறே விரோதி நிவ்ருததி ப்ரார்த்தனையும் வநதேறியிலலாது ஆத்ம ஸ்வரூபத்திற்கு இயலபாய்ப் பொருந்தியதேயாகும.

இநத விரோதி நிவ்ருத்தி பிரார்த்தனையை எம்பெரு மாஞரும் "மனோவாக்காயை.' என்ற சூர்ணையில கத்யத் தில் செய்தருளிஞர்.

தனனுடைய ரக்ஷணத்தில தானே முயலவ்து எனபது எம்பெருமான ரக்ஷணம செயவதற்கு விரோதமாய்த் தலைககட்டும. அவவித எண்ணத்துடன் யஜ்ஞம், தானம், தவம் முதலியவறறை உளளடக்கிய கர்மயோகம் தொடங்கிப் பிறஉபாயஙகளைப் பின்பற்றிஞல அப்போது பரதந்தரஞன சேதனனுக்கு அதுபொருந்தாது. முனனது சுவாதந்த்ரியமான ப்ரவ்ருத்திகள (செயலகள்) என்பதை அறிக. அவை பாரதநத்ரியமான ஆத்ம ஸ்வரூபத்துக்குச் சிறிதும் ஏற்காதவையாகும்.

## 47. ஆக்ஷேபமும் ஸமாதானமும்

ஆனால ப்ரக்ருதி ஸமபந்தத்தை நிவருத்தி செய்தருள வேணடும் என்று ப்ரார்த்திப்பதும் எமபெருமானுக்கு அனபிமதம் (உடன்பாடின்மை) என்று ஸ்ரீவசனபூஷணத தில் சொலலபபட்டிருக்கிறதே? என்றால், அது ஆழ்வா ரைப் போன்ற பரம ஆரததாகளைக குறித்துச் சொல்லப் பட்ட விஷயமாகும். ஆழவாருககுத் திருநாடு சென்று எமபெருமானுககு வழுவிலா அடிமைகளை ஒழிவில காலம எலலாம் செய்யவேணடும, அதறகு விரோதியாய இடைச்சுவரா யிருக்கும் உடல தொடர்பை அறுத்துக கொளளவேண்டும; அதையும் அவனே போக்கி யருள வேணடுமென்ற எண்ணஙகள் தோன்றின. ஆனால ஆழ வார் திருமேனியோ சரம சரீரம, அவருடைய சரீரம எம பெருமானுக்கு போக்யமா யிருந்தது. திவய தேசத்தில பணணும் விருப்பத்தை ஆழ்வாருடைய அவயவஙகளில பண்ணத் தொடங்கினான். அப்படி விருப்பம் பண்ணும் போது அந்த சரீரததின அழிவை ஆழ்வாா ப்ரார்த்தித தால் அது எம்பெருமானுக்கு இஷ்டமாயிருக்காது. இதனைத்தான ஸ்ரீவசனபூஷணம் சொலலியது.

நாமும் ஆழ்வாரைப் போல பரம ஆர்த்தராய் அவனும் நம சரீரததில விருப்பம் பண்ணுபோது ப்ரக்ருதி ஸமபநத நிவருததியை ப்ரார்ததிப்பது கூடாததாயிருக கும என்றுணர்க. எநநிலையிலும் அப்படி ப்ராாததிப்பது தகாது என்றால ஆர்த்தியே ஏறபடக்கூடாது என்று சொலலியதாகிவிடும, அபபடியானால அதிகாரியே இலலையாகிவிடும. ஆழவாரும தமமுடைய சரீரம அவனுக்கு அபிமதம (விருபபம) என்று அருளிச்செய்த தும் அவனைக் கால பிடிதது 'மங்கவொட்டு உன மாமாயை' என்றும, 'திருவாணை நின்னாணை' என்றுமஆணை யிட்டு ப்ரார்த்திதது சரீர விமோசனம பணணுவிததுக் கொணடு போனார். இப்படிப்பட்ட ஆரததி பிறந்தவர்

கள் இவ்வுலகில இனறு இருந்தாராகில் அப்படி ப்ரார்த்திக்கலாம்.

சரீர சம்பநதத்தை அறுத்தருள வேண்டுமென்று ப்ரார்த்திககக்கூடாது எனருல் அப்படிச் சொலபவர்கள காம பரவசராய் விஷய சுகங்களை இவ்வுடம்போடு கூடியிருநது நீண்டநாள் அநுபவிக்க வேணடுமென்று நினைக்கும் ஸமசாரிகளே எனறு அறுதியிடலாம்.

ஆகையால் ஆழவார் பாசுரங்களில சரணயனை எம்பெருமானுடைய எளிமை முதலிய ப்ரபாவங்களைச் சொலலுமிடங்களை மட்டும் பார்த்துக்கொண்டு நாம் எப்படியிருநதாலும் போதும; ஓரஞசலி மாத்ரம செய்தால் வைகுநதம ஏறலாமென்ற நினைவுடன் அஹங்கார ம்மகார அர்த்த காம பரவசராய் விஷய சுகங்களை அநுபவிக்க ஆபாஸமான பந்துக்களோடு கூடிவாழ்வது ஆழவார் திருவுளளத்துக்குச் சிறிதும பொருந்தாது.

## 48. சரண்ய ப்ரபாவம் பொய்யா?

அப்படியானல சரணய பரபாவம் பொய்தானு? என்று வினவலாம். கீதாசார்யன், "அபிசேத ஸுதுராசாரோ பஜதே மாம் அநநயபாக்" என்று தொடங்கிக் கூறியுளளான. முன்பு மிகவும ஒழுககக் கேட்டுடன் இருநதாலும் எமபெருமானை அநந்ய பக்தியோடு விருமபினுனகில விரைவில அவன் விலக்ஷணமாகி உயவடைகிறுன். பக்தியோடு கூடியபிறகு பழைய வாசனையே தொடாந்ததாகில், அது அறவே அழிகினறவரையில எம்பெருமான பொறுத்திருநது பலனை அளிககிறுன. காலத் தாழ்வே ஒழிய பலனில கணணழிவிலலை.

உழவன் விவசாயம செய்யும்போது நெலலை விதைத்து அது முளைததவுடனேயே அறுதது உணபதிலலை. அதை வளர்ததுக களை யறுததுப் பக்குவமான பினபே அநுபவ யோகயமாகும்படி செயது அனனமாக்கி உண்கிறுன. அது போனறே ஸர்வேச்வரனும் கை தொழுத சேதனனைத்

திருத்தியே தனக்காக ஆக்கிக்கொளகிறுன. மறுபிறவியி லாகிலும் பொறுத்திருநது அவனைத் திருதகி விலக்ஷண மாக்கிய பிறகே ஸாவேசுவரன அவனைப புஜிக்கிறுன. அவனை காலமுளளளவும் பிறவிச் சுழலில கட்டிப்போடுவ திலலை, ஒருநாள ஒருகாலத்தில அவனை மேறகூறியவாறு ஆக்கி அடிமைக்கண நிலைப்பித்துக்கொளகிறுன. "அடிய வரை வலவினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடான" எனறு ஆழ்வாரும அருளிச்செயகிறுர்

## 49. நம்பிள்ளை நல்வார்த்தைகள்

நம்பிளளை பின்பழகியபெருமாள சீயர் மடததிலே எழுந்தருளியிருநதபோது சிஷ்யாகள அவர் திருவடிகளில் தணடனிடடு, "ஸ்வாமி, ப்ராப்ய பூமியாகிய வைகுந்த மாநகா கிட்டவேண்டுமாகுல் ஆழ்வாருடைய அவஸ்தை கள் (மனப்பாங்கு நிலைகள்) ஏறபடவேண்டுமெனறு கூறப்படுகிறது. அனனபாகுதிகளோடே கூடியிருக்கும ஸம்சாரிகளாகிற நாஙகள் என செய்வோமா?" எனறு மன முருகி வினவினர்.

நம்பிள்ளையும அவர்களை க்ருபையுடன் பார்த்து, "இஙகு அநத அவஸ்தைகள் பிறககவிலலை என்ருலும் ஸதூலசரீரம் (பருவுடல்) கழிந்து போகும்போது தனனை எயதுவதறகுச் சற்று முன்பாக அந்த அவஸ்தைகளைப் பிறக்குமபடி செய்து எமபெருமான் சேர்ததுக்கொள வான; அது அவன செயலாகும" என்று அருளிச் செய்தார்.

ஆழவாரைப போனற தகுதியுடைய அதிகாரிகளைப் பெருமையாலே அவதாரஙகளிலே எமபெருமான மெய வெளுதது நாககு வறறியிருப்பான. அதாவது பெருமை யாலே மெய் வெளுத்தும, பெறருலும் அவர்கள பிரயோ ஜனநதரபராகள (வேறு பயனைக் கருதுவோர்) ஆகை யாலே மயிா பட்ட சோறு எனறு நாக்கு வறறியிருபபான ஆகையாலே பயன வேறு கருதாதிருககும் அதிகாரி

புருஷர்கள் மிகவும் அரிதாகவே இருப்பார்கள. ""அவர் களை வரஜைக்கு அக்கரையிலே காணலாம்; இவ்விருள தரு மாஞாலத்தில் காணவரிது'' எனறு ப்ரமேயரத்னத் தில் கூற பபட்டுள்ளது.

## 50. ப்ரபத்தி எளிய உபாயமா? ஆக்ஷேப ஸமா தானங்கள்

இப்படிப்பட்ட அருமைப்பாடுகளைப் பாாக்கும்போது பரபத்தியை ஸுகர உபாயம் (செயதறகு எளிது) எனறு எபபடிக் கூறலாம? உபாயாந்தரஙகளில செயதற்கு அரிதான பரவ்ருத்திகள் விதிககப்படுகினறன, இஙகு நிவருததியே (விடுதல) வேணடியதாகையால எளிதா கிறது

இந்த உபாயமானது எளிதாஞல், ''ஸ மஹாத்மா துர்லப:'' எனறும, 'ஒரொருவர் உணடாகில அத்தனை காணை'' எனறும இதனைப் பறறியிருப்பார் மிகவும் அரியா எனறு சொலலப்படுவது ஏன்? என்ற வினு எழுகிறது.

அநாதியான பகவந் மாயையால சுலபமாக நிவ்ருத்தி பிறகக மாட்டாது எனற அபிப்ராயத்தால் அவ்வாறு சொலலபபடுகிறது. அப்படியாஞல ப்ரக்ருதி வசப்பட்ட சேதனனுககு நிவருத்தி தான் எப்படிப்பிறக்கும? என்ருல இது (நிவ்ருத்தி) தனஞலும பிறராலும பிறப்பித்துக் கொளள முடியாது. பகவத் கடாக்ஷம் காரணமாக உணடான ஸதாசார்யரின திருவருளாலேயே நிவ்ருததி ஏற்பட்டு அதிகாரம உணடாகும.

ஸதாசாாய ஸந்நிதியில தாவரங்களுக்கும கூட முகதி யோகயதை ஏற்படுகிறது. பெருமாள் (இராமன்) திருவருளுக்கு இலக்கான கோசல சராசரங்களும் கோவிந் தன திருவருளுக்கு இலக்கான கோகுல சராசரங்களும் முகதி யோகயதையை எயதிஞர்கள். இவவாறு பகவத் கடாக்ஷம் அடியாகத் தாமாக வரும் நனமைகளுககுச் சேதனனிடம உரிமையை ஏறிட்டு ருஷிகளும ஆழவார்

களும் ஆசார்யர்களும் ஹிதரூபமானவற்றை சிக்ஷித்துச் சொல்லவேண்டுமா?

ஸாவேசுவரன சில ஆதமாக்களை உய்விக்க நினைத் தால ஆத்ம குணஙகளை உண்டாகப்பணணி கைகமகாள் கிறுன். தானே கண காணவந்து வாய திறநது அவன் அருளிச்செயவதில்லை. ஆத்ம குணங்களை உண்டாக்கவே சாமானய சாஸதரங்களையும விசேஷ சாஸ்த்ரங்களையும் முறையே ருஷிகளைக் கொண்டும ஆழ்வார்களைக் கொண் டும் பரகாசபபடுத்தினுன.

கொடியைக் கொள்கொம்பிலே ஏறறுவதற்குச் சுள் ளிக்கால நடுவார்கள். சுள்ளிக்கால போன்றது சாமானய சாஸ்த்ரங்கள். கொடியாகிய ஆத்மா படர்வதற்குரிய கொள்கொம்பு ஆழ்வார்களின் அருளிச் செயல்களான விசேஷ சாஸ்த்ரஙகள்.; விசேஷ சாஸத்ரங்களையே நாத, யாமுந, யதிவராதிகள் விளககி உபதேசித்தும் நூலகள் எழுதியும் உபகரிததனா. விசேஷ சாஸ்த்ரங்களின சேதனனுக்கு ஆத்மகுண பூர்த்தி தோனறுவதற்காகவே சிக்ஷைகள் இடம் பெறுகின்றன.

ஸாமானய சாஸத்ர அப்யாசத்தால் (பயிற்சியால்) ஸாதநாநதரஙகளைப் பற்றி ஒழுகியவன் அனேக பிறவி களில் பாபங்கள் ஒழிநதும மனத்தில நிர்மலம முற்றிலும் ஏற்படாதபோது பெரிதும் துக்கப்பட்டு, ""என்னுடைய மனோதோஷம் எனனுலே போக்க அரிது, நீயே உபாய மாக வேணடும்'' எனறு அபேக்ஷிக்கிறுன; அவனே படிப் படியாக ஸிததோபாய நிஷ்டனுக மாறுகிறுன். அநத நிஷ்டை பரிபககுவமானுல திருககணணமஙகையாணடா னைப் போல ஸ்வ வயாபாரங்களை (தன் முயற்சிகள்) முற்றிலும விட்டு மிகுநத ஆரத்தி பெருகப் பெறுகிறுன். அவவார்ததியின விளைவாக அவன பிள்ளை திருநறையூர் அரையரைப் போல தனனுடைய உடமபையும வெறுத்து இறுதியில முறையாக முகதனுகிறுன. இவ்வளவுக்கும

அடிப்படை சிக்ஷாரூபமான ஸாமாநய விசேஷ சாஸத்ரங களை என்பதை நினைவிற கொள்ளவேண்டும.

## 51. காலத் தாழ்வு ஏன்?

ஸர்வ சகதியுகதனை எம்பெருமானை ஸிதத உபாய மாகப பற்றினலும பலனை எயதக் காலத்தாழவு உண்டகுமோ? எம்பெருமானையே உபாயமாகப் பறறுவோருளளும் வேறு பயனகளை கருதுவோாகளும உளளனர். அவனையே உபாயமாகப பற்றி ஐச்வாய கைவலயஙகளைப பேருக மதித்து அவனிடத்தில பெறுவதும செய்கிறர்கள. இஹ பர ஐச்வர்யங்களை இச்சித்தவர்களை அவறறைத் துசசமெனறு அறுதியிட்டு எம்பெருமானுககுச் செயகிற அடிமையே சாஸ்வதம் என்று முடிவு செய்து மீளப் பல பிறப்புககளை ஆகலாம. அதனல் அவர்கட்குப பலமானது காலந் தாழ்த்தே விளைகிறது. கைவலலியத்தை விரும்பிப் பெற்றவனுக்கோ அதிலிருநது மீளவிரகிலலை. ஆகையால் அநநய ப்ரயோஜனனய (பயன வேறு கருதாத) உபாயாதிகாரம பூர்ததியானவனுககு காலத் தாழ்வு ஏறபட வழியில்லை. ஆர்ததன் ஆனல் அக்கணமே பலனும. த்ருப்தன ஆனல் இப்போதைய சரீரம் முடியுங காலத்தில் பலனும் எய்தப்பெறும்.

## 52. உபாய அதிகாரி லக்ஷணம்

எமபெருமானுக்கு நான் சேஷபூதன்; விஷயப்ராவணயம் நமக்குத் தகாது; எனனது அவன தந்த ஞானம்; இழிநத ஒழுக்கஙகளைவிட்டு நலலொழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும, அவனுக்கு நான எப்போதும பரதந்த்ரன் (இயக்கப்படுபவன்), நான விட்டதும் பற்றியதும் அவனலே வநதது; நான் செயயும் அடிமையும் அவன தானே செயவித்துக் கொணடான; இவ்வாறு நினைதது உறுதியுடன இருப்பதே உபாயாதிகாரி லக்ஷணம்.

## 53. அவயவ அவயவி பாவம்—சரீர ஆத்ம பாவம்

ஜீவ பர ஸம்பந்தததை "உடலமிசை உயிர் என" என்று ஆழவார் அருளிச்செயவர். எமபெருமான ஆதமா எனறுல் சேதன அசேதனங்கள் அவவாத்மாவிறகு சரீர மாகினறன. அவன அவயவி என்றுல சேதன அசேதனங் கள அவனுக்கு அவயவங்கள் ஆகினறன. இதன் உண்மை நிலையை அறியாத சிலர் தாம விஷயபரவணராயக குறறங்களை இழைதது விடடு அவறறைச் செய்வித்தவன சரீரியான இறைவனே எனறு எம்பெருமான மீது பழியை ஏறிடுகிறுாகள. அவயவபூதரான தாஙகள் துாவாசனை யால மேலிடடுச் செயயும அநீதிகளும் அவயவியான அவனே செயவிததன எனறு அவாகள எணணுகினறனா.

சரீர ஆதம பாவம சொனனதுககுக கருத்து, ஆதே யதவம் விதேயத்வம் சேஷத்வம (தாஙகபபடுவது, விதிக்கப்படுவது, அடிமைப்படுவது) ஆகியவை சேதன னுககு ஆத்ம ஸ்வரூபஙகள என்பதை அறிந்து கொள்வ தற்காகவாகும.

அவயவ அவயவி ஸமபந்தம் சொன்னதற்குக கருத்து, 'சேதனன செயயும் கைஙகாயத்தில அஹங்கார மமகா ரங்கள வாராதபடி காத்ருத்வம்(செய்பவன நிலை)போக்த், ருத்வம் (நுகர்பவன நிலை) ஆகிய மாசுகள இன்றி எப் போதும் பரதநத்ரன எனற நினைவு இடையறுது உண்டாக வேணடும எனபதறகாகவாகும்.

நாராயணனிடததிலேயே நிஷ்டை யுடையவர்கள் பண்ணுகிற செயல் எலலாம் அவனுக்கே யாயிருக்கும், அதாவது, கைஙகாயமாய முடியுமெனறு சொல்லப் படடுள்ளதனறே! எனனில;

கர்ம வசபபட்டு துாவாசனையால வரும் செயலகளை எலலாம் அவனுக்கே யாயிருக்கும எனபது ஒரு நாளும் கூடாது. 'நாராயணைக நிஷடஸ்ய' எனறு சொல்லப் பட்டுளளது. ஆழ்வாரைப் போன்றவாகளே நாராயண

நிஷ்டர்கள். ஏக பதத்தால் இது விளங்குகிறது. அத்தகையோர் ஒருபோதும இழிசெயலகளை நினைக்கவும் மாட்டார்கள். இனி அவர்கள "அழுவன தொழுவன ஆடிக காண்பன பாடியலறறுவன, தழுவல வினையால பக்கம் நோக்கி நாணிக கவிழ்நதிருபபன'' எனறு படுகிற அலமாபபெல்லாம அவனைக குறிததது ஆகையாலே அவை எல்லாம் அவனுககு மேனமையை அளிபபனவாய் இஷ்ட கைஙகர்யஙகளைப போனறு அவனுடைய முக மலாச்சிக்கு ஏதுவாயிருக்கும.

அப்படியினறி, துர்விஷயஙகளில ஈடுபட்டு துக்கமே படுகினற ஸம்ஸாரிகள செயகிற அலமாப்புகள் எலலாம் எம்பெருமானுககுக கைஙகாயமாகிவிடும் என்ருல, அங்ஙனம சொல்லுகிறவர்கள சிதரவதை தணடனைக குரியராவார்கள.

## 54. அஜாமிளன் சரித்ரம்--ஆக்ஷேப ஸமாதானம்

அஜாமிளன் தீய வொழுககத்திலேயே நிலைநினருன். இறுதிக காலததில புத்ரன் என்ற மயக்க வுணர்ச்சியால திருநாமம் சொனனுன். அதை ஒரு வ்யாஜமாககி எம்பெருமான் அருள செயதான் அல்லவா? எனறு கேட்டால அவனை எமதூதுவர் கைக்கொண்டு போகாதபடி நிகரஹிதது விடுவிக்க, அவன் தெளிந்து ஆச்சாயபபட்டு பகவத் ப்ரபாவம அறிந்து பிறவறறில வெறுபபுற்றுப் பரநதாமனிடம் விருப்புற்று அதன் பிறகே முகதி அடைநதான் என்று வருணிக்கப்பட்டுளளதை உணாக.

ஆழ்வார் தொடங்கி எல்லாரும் அவனுடைய எளிமைப் பண்பினையே சொல்லுகிருர்கள். அப்படியிருகக அவனை அடைவது (பகவத் விஷயம்) துர்லபம எனறு சொலவது தகுமா? என்ற வினு மீணடும் எழலாம.

அவனுக்கு ஸௌலப்யம் முதலிய குணஙகள் இல்லையென்று ஒருககாலும்சொலலவிலலை. 'ரிபூணுமபிதவஸல'' பகைவரிடத்தும வாதஸலயம மிகுநதவன எனறு

என்று சொல்லப்பட்டாலும் இவன் தன்னுடைய ஸ்வரூபத்துக்குப் பொருத்தமாக வாழவேண்டும் அல்லவா? அவன பிராட்டி பக்கல அபசாரம் பண்ணின காகத்தை ரக்ஷித்தான என்று இவனும் அப்படிப்பட்ட அபசாரத்தை மனத்தாலும் நினைக்கலாமோ!

ஆத்ம ஸ்வரூபத்துககு அழிவு வாராமல் நடந்து கொண்டால அது எம்பெருமானுக்கு உகப்பாகும். அவன் ஒருக்கால் ஒருவனைத் தன்னுடைய நிரங்குச ஸ்வாதந்த்ரியத்தால் (தடுப்பாரற்ற உரிமை) ரக்ஷித்தான் எனறால எல்லாரும அதனையே பொதுவழியாகப் பற்றி அனர்த்தப்படுவது பொருந்தாது. மஹாபாபியானாலும தன்னை ஆச்ரயித்தால் முக்தனாவான என்று,

"யே நருசம்ஸா துராத்மாந: பாபாசார ரதாஸ்ததா |

தேபி யாந்தி பரம் தாம நரநாராயணாஸ்ரயா. ||

"அபி பாபேஷ்வபி ரதா: மத்பகதா: பாண்டுநந்தன |
முச்யந்தே பாதகைஸ்ஸாவை: பத்மபத்ரமிவாம்பஸா" ||
என்ற பகவத் வசனங்களால அறியக் கிடக்கிறதே என்றால்;

எம்பெருமான தன்னுடைய அருளால் சீக்கிரமாகவே தர்மாத்மாவாய் சாநத சித்தனாக அவனை மாற்றியே முகதனாக்குவான் எனறு தெளிக.

கோசல கோகுலங்களிலே யிருநத சராசரங்களுக்கும் விதுர, மலாகார, ததிபாண்டன முதலியோர்க்கும் பஞ்ச ஸமஸ்காரங்களும ஆசார்யாபிமானமும் உணடாக்கியா அருள செயதான? இவ்வாறு நினைக்கலாம. அவ்வாறு அவன் சுலபனா யிருநதாலும நம்முடைய பூர்வாசார்யர்கள் அவனுகக் கொடுககிற முகதியை விருமபாது அவனை மகிழவிப்பதிலேயே ஊனறி, "எமமா வீடுத் திறமும் செப்பம்" என்றும, "சிறப்பில வீடு சுவர்க்க நரகம் இறப்பில் எய்துக எய்தற்க தனக்கேயாக எனைக்

கொள்ளும ஈதே'' எனறும் அவனுக்கு மிகவும் ப்ரியத்தைச் செய்யுமவரா யிருப்பர்கள், அவனுக்கு மிகவும ப்ரியரா யிருப்பாகள்.

பூர்வாசார்யர்களின் வழியை விரும்பினுல் அப்படியே அவ்வழியிலேயே நடநது செல்லுங்கள். நாம் பஞ்சமோபாய நிஷ்டர் வழியிலே நடக்கிறேமென்று பேரை யிடடுககொண்டு பூர்வாசார்யர்களுடைய வசனங்களுக்கு விபரீதார்த்தங்களைச் சொலலி இழிந்த ஒழுககங்களில வாழ முயன்ருல நம் பூர்வர்களின் நிக்ரஹத்துக்கு ஆளாவீர்கள்!

## 55. பயமும் அபயமும்

ஸவதந்த்ரனுன ஸர்வேச்வரனைப் பற்றினுல் பயப்பட வேணடும், ஆனுல ஆசார்யாபிமானத்திலே ஒதுங்கினுல ஸ்வப்ரவருத்தி, நிவ்ருத்திகளை (தன செயலகள், செயலினமைகள) கண்டு பயப்பட வேண்டாமெனறு ஸ்ரீவசனபூஷணத்தில சொலலபபட்டிருககிறது. ஆனுல அதைக் கொணடு நம் இஷடப்படி துராசாரஙகளைத தழுவக கூடாது. ஆசார்யாபிமான நிஷடனுக்கு பயமிலலை என்ற தன கருததை அறிநதுகொள்ளவேணடும். ஆசார்யன் சிஷயனைத் திருத்திப் பணிகொண்டு எம்பெருமானுடைய லீலைககு அவன பொருளாகாதபடி நோககி ரக்ஷிககிறுன, எனவே சிஷயனுக்கு பயப்பட வேண்டியதிலலை எனபதே உடகருத்தாகும.

ஸ்வதநத்ரனுன எம்பெருமானைப் பறறி பயப்ரஸங்கம் வாராதபடி ஆழ்வாரை ஆச்ரயித்து அவர் திருவடிகளையே உபாயமாகப் பற்றின மதுரகவியாழ்வார் நமக்கு ஆழவாா ஸமபந்தம் உணடென்று சானறேர் பழித்த செயல்களைப் பண்ணிககொண்டு நமக்கு பயமேது எனறு திரிந்தாரில்லை.

ஆனுல், ''வேர்த்தபோது குளித்து பசித்தபோது புசிதது பட்டர் திருவடிகளே சரணம் என்றிருப்பறுத

